# இனியவன் வழங்கும்

# உத்தரமேரூர் உலா



□ உத்தரமேரூர் □ திருமுக்கூடல்
□ மானாம்பதி □ மானாம்பதி கண்டிகை
□ பெருநகர் □ இளநகர்
□ களியாம்பூண்டி □ காரணிமண்டபம்
□ தண்டரை □ விசூர்
□ மேநல்லூர் □ மருதம்
□ திருப்புலிவனம் □ கடம்பர்கோயில்
□ நெய்யாடுபாக்கம் □ சீட்டணஞ்சேரி
□ உரக்காட்டுப்பேட்டை □ காவித்தண்டலம்
□ சாலவாக்கம் □ பினாயூர்
□ திருவானைக்கோயில் □ புலிவாய்
□ மல்லியங்கரணை □ கடல்மங்கலம்

ஆகிய ஊர்களின் -

○ ஆன்மீகச் சூழல் ○ செவிவழிக் கதைகள் ○ வரலாற்றுச் செய்திகள்
○ கல்வெட்டுச் சான்றுகள் ○ மருத்துவ நிலை ○ கலை ○ கலாசாரம்
○ கல்வி ○ இன்றைய வாழ்வு ○ நாளைய நம்பிக்கைகள்

---

**மண்வாசனை வெளியீடு தரும் அரிய தொகுப்பு நூல்**

---

**ஓவியங்கள் : மணியம் செல்வன்**

THIS BOOK IS PUBLISHED WITH THE
FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA - TIRUPATI DEVASTANAMS



*மண்வாசனை வெளியீடு : 1*
*முதற்பதிப்பு : அக்டோபர் - 1992*
*விற்பனை உரிமை : வாசுகி நூலகம்*
*விநாயகநல்லூர், வேடந்தாங்கல் அஞ்சல்*
*செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம் - 603 314*
*விலை ரூ.30.00*

---

BIBLIOGRAPHICAL DATA

UTTHARAMERUR ULA - A COMPILING OF CULTURAL HISTORY
□ BY INIYAVAN - 20.4.1942 □ © AUTHOR
□ FIRST EDITION: OCTOBER - 1992
□ PAGES: 136 □ 14 x 21.5 cms.
□ 11.5 PT. LETTERS □ 14 KG WHITE PRINTING
□ BOX BOARD BINDING
□ COVER DESIGN AND INNER DRAWINGS: MANIYAM SELVAN
□ LASER PRINTING: ADYAR STUDENTS XEROX, ADYAR, MADRAS-20
□ PRINTED BY: COLOUR GROOVE, MADRAS- 600 086
□ SALES RIGHT: VAASUKI NOOLAGAM
VINAYAGANALLUR, VEDANTHANGAL PO,
CHENGAI M.G.R. DISTRICT - 603 314.
□ PRICE: Rs.30.00

---

*இனியவன் எழுதிய நூல்களில் சில:*
□ *விதியின் கை - கல்கி நினைவு நாவல் போட்டியில் முதல் பரிசு பெற்றது*
□ *பொன்மனம் - சிறுவர் நாவல் போட்டியில் முதல் பரிசு பெற்றது*
□ *காவியக்கனவு* □ *நெஞ்சங்கள்* □ *தனிப்பறவை* □ *நெருப்பு மலர்*
□ *இன்று புதிதாய்ப் பிறந்தோம்* □ *இலட்சியங்கள் தோற்பதில்லை*
□ *வேடந்தாங்கல்* □ *கல்யாண ராகங்கள்* □ *புனித நெஞ்சம்* □ *முள் கிரீடம்*

---

இந்நூல் உருவாகி உலாவர
உறுதுணை புரிந்த நேச மனங்களை
நெஞ்சம் மறப்பதில்லை...



- அமரர் சோமலெ ☐ மீ.ப.சோமசுந்தரம் (சோமு)
- 'கல்வெட்டு நிபுணர்' கா.தியாகராஜன் ☐ மனை ப.கிரன்
- 'சப்தகிரி' ராமமூர்த்தி ☐ பேராசிரியர் தர்மாரெட்டி
- திருப்பதி- திருமலை அறநிலைய அலுவலர்கள்
- கடல்மங்கலம் அரங்கநாதன் (பாபு) ☐ நிருபர் தாமஸ்
- புலவர் நடேச நாராயணன் ☐ நீல. கார்த்திகேயன்
- கனியாம்பூண்டி இராமதாஸ்
- அகஸ்தியப்ப முதலியார் ☐ பெருநகர் எல்லப்பன்
- புலவர் சுவாமிநாதன் ☐ புலவர் கோ. கோவிந்தசாமி
- தமிழ் இலக்கிய மன்றம்
- எஸ். சம்பத்ராஜ் ஜெயின் ☐ கி.ஜெயராமன் ☐ வ.சம்பத்து
- சஜ்ஜன்ராஜ் ஜெயின் ☐ பர்சன்
- லோகப்பெருமாள் ☐ வரகுண பாண்டியன்
- வெ.சுந்தரவரதன் ☐ தி.க.சண்முகம்
- கோ.சந்தானகிருஷ்ணன் ☐ வேடந்தாங்கல் ஆ.விஜயகுமார்
- 'கலைஞன் பதிப்பகம்'மாசிலாமணி ☐ 'அனுராகம்' நந்தா
- 'அசோஃபா' திட்ட இயக்குநர் எம்.எஸ். சண்முகம்
- 'பதினாறு கவனகர்' திருக்குறள் இரா.கனகசுப்புரத்தினம் ☐ பி.மாயாண்டி
- டாக்டர் வசந்தா கந்தசாமி ☐ டாக்டர் கந்தசாமி
- தலைமையகத்துத் துணைவட்டாட்சியர் என்.எம்.ராஜசேகர்
- ஓவியக்கவிஞர் மலர்மகன் (சீனி)
- கவிஞர் தாராபாரதி
- கவிஞர் பல்லவன்
- மணியம் செல்வன்
- அடையாறு மாணவர் நகலகம்
- நா. அருணாசலம்
- அ. சௌரிராஜன்
- கே. நாகராஜன்
- மு.கலைவாணன்
- வெ. சரஸ்வதி
- பா.பத்ரிநாராயணன் ☐ வாசுகி பத்ரிநாராயணன்

இவர்களுக்கு, என்றென்றும் என் இதய நன்றி உரித்தாகும்...

அன்புடன்,
இலக்கியவீதி இனியவன்

# உலா தொடங்குவதற்கு முன்னால்....



'உலகம் சுற்றிய தமிழர்' என்கிற அடைமொழி 'சோமலெ' அவர்களுக்கு முற்றிலும் பொருந்தும்! அவர் செல் லாத நாடில்லை; சுற்றாத ஊரில்லை! ஆனால், எங்கே போனா லும், நெஞ்சம் தமிழர் நலனிலேயே நாட்டமாயிருக்கும்! அவரது பயணம் கண்களுக்கு மட்டுமானது அல்ல; கருத்துக்கே முதன்மை யானது! அவரைப் பேச வைத்தால், 'தொட்டனைத்தூறும் மணற் கேணி' என வள்ளுவர் சொல்வாரே, அப்படி - ஆயிரம் செய்தி வரும்!

சான்றோர் மதிக்கும் சாதனையாளரான சோமலெ அவர்க ளுக்கு, 27.2.83 அன்று 'இலக்கியவீதி' ஒரு பெரிய விழா எடுத்தது; அமைச்சர்களும், அறிஞர் பெருமக்களும் நிறைந்த சபையில் அவரை முறைப்படி சிறப்பிக்கும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத் தது!

அதுவரை எவர் வற்புறுத்தியும் பாராட்டுக்கு இணங்காமல் மறுத்தவர், 'இலக்கியவீதி'யின் சிறப்பை இதய பூர்வமாக ஏற்றுக் கொண்டார் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சி! அப்போது, எனக் காக, என் இளவல் கவிஞர் தாராபாரதி இயற்றித் தந்த

கவிதையை, இப்போது நினைவு கூர்வது பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

சீர்மிகுந்த தமிழறிஞர்; உலகம் சுற்றிச்
சிறப்படைந்த 'தென்னாட்டு மார்கோ போலோ!'
ஏர்சிறந்த பாரதத்தை எழுது கோலால்
'இமயமுதல் குமரிவரை' அளந்த மேதை!
பார்புகழும் தமிழகத்தை ஊர்ஊ ராகப்
பகலிரவாய் நகலெடுத்து வந்த தூதர்!
நீர் பிறந்த பின்னாலே பேர்சி றந்த
'நெற்குப்பை' தனில்நீங்கள் தங்கச் சம்பா!

இனிமைமிகு செந்தமிழில், ஆங்கி லத்தில்
எண்ணற்ற நூல்வழங்கும் சுரங்க மானீர்!
புனிதமிகு 'விழாமலர்கள்' பதிப்பிக் கின்ற
பூந்தோட்டம்; திருப்பணிக்கு அரங்க மானீர்!
தினச்செயல்கள் திட்டமிடும் நாட்கு றிப்பு!
தேனீக்கு வகுப்பெடுக்கும் சுறுசுறுப்பு!
தனிமனிதர்; அச்சமற்ற அச்ச கம்நீர்;
தகுதிக்கு அரசாங்கப் பரிசு பெற்றீர்!

உலகறிந்த எழுத்தாளர்; குறளைப் போல
உள்ளடக்கம்; விளம்பரத்தை விரும்பா நெஞ்சம்!
பலதுறையில் பெரும்பதவி வகித்த பின்பும்
பார்வைக்கு எளியவராய்த் திகழும் தோற்றம்!
உலகத்தின் உயர்கல்விக் கழகம் தோறும்
உங்களது படைப்புபல பாட மாகும்!
கலகத்தைக் கீழ்மைகளைக் கண்டால் சீறும்
இலக்குமணக் கோபமது ஊர்க்கு லாபம்!

மூத்தவர்நீர்; முன்னவர்நீர்; பயணத் திற்கு
முன்னோடி யானவர்நீர்! பயணத் தந்தை
ஏத்தி தமிழ் நாற்றிசையும் இசைத்த வர்நீர்!
என்றென்றும் தமிழ்போல வாழ்க நீவிர்!

- இந்த வாழ்த்துக் கவிதை, வார்த்தைக்கு வார்த்தை உண்மை யானது.

அளவற்ற தகுதிகளுடன் கூடிய அறிஞர் சோமலெ அவர்களால்தான், எனக்குப் பயண இலக்கியம் படைக்க ஆர்வம் வந்தது.

தமிழர் அனைவரும் தன்னிகரற்ற பொதுஅறிவு பெற, அவர் ஏராளமான நூல்களை எழுதினார்; அவை யாவும், தகவல் களஞ்சியங்களாகப் பயன்படுபவை.

'தமக்குப் பிறகு, பட்டி தொட்டிகளுக்கெல்லாம் சென்று - பயனான செய்திகளைத் தொகுத்து, பாருக்கு வழங்கப் பலரும் முன் வர வேண்டும்' என்று அவர் மிகவும் விரும்பினார்.

அவருக்கும் எனக்கும் அதிக வயது வேறுபாடு இருந்தது; ஆனாலும், இளமைக் கால நண்பர் போல் என்னிடம் எல்லையில்லாத அன்போடு பழகினார். உவகையுடன் பல ஊர்களுக்கு உடன் வந்து ஊக்கப்படுத்தினார்.

உதவிக்கு, கல்வெட்டு நிபுணர் கா.தியாகராஜனை அழைத்து வந்தார். உத்தரமேரூரிலும், திருமுக்கூடலிலும் உள்ள கல்வெட்டுகளை இவர் படித்துச் சொல்லுமுன், சோமலெ அவர்கள் பல செய்திகளைத் தெரிவித்து வியப்பில் ஆழ்த்தினார்! எந்த ஒரு சிற்றூரைப் பற்றியும், அந்த ஊர்க்காரர்களே ஆச்சரியம் கொள்ளும் அளவு அவரிடம் பல அரிய செய்திகள் இருந்தன!

உத்தரமேரூரில் ஒரு விழா ஏற்பாடு செய்து, அப்போது தமிழக அரசின் பழங்கலை இயக்கக இயக்குநராக இருந்த இசைப்பேரறிஞர் மீ.ப.சோமசுந்தரம் (சோமு) அவர்களைத் தலைமை வகிக்க வைத்தார்.

அமரர் சோமலெ அவர்களால் என் உள்ளத்தில் ஊன்றப்பட்ட பயண இலக்கிய வித்து, முத்தமிழ் வித்தகர் சோமு அவர்களால் முளைத்துத் தளிர்த்தது. அரசுக்காக, செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம் முழுவதும் சென்று, 'கிராமக் களஞ்சியம்' ஒன்று தயாரித்து வழங்குகிற பொறுப்புக் கிட்டியது. அதைச் செம்மையாக எழுதி முடிப்பதில், சோமலெ அவர்கள் அணுக்கமாயிருந்து உதவினார்; பணி முடியும் வரை, என் இல்லத்திலேயே தங்கியிருந்து முழு மூச்சுடன் செயல்பட வைத்தார்!

'அந்தப் படைப்பு, உரியவர்களின் பாராட்டைப் பெற்றதற்கு, அவரே காரணம்!' என்றால் மிகையல்ல.

என் சிற்றுலா அனுபவங்களைத் தொகுத்து - சிறுசிறு நூல்களாக்கி - அந்தந்த வட்டாரங்களில் வெளியிடுவதன் மூலம், அமரர் சோமலெ அவர்களின் நினைவை மிகவும் சரியான முறையில் போற்றியவனாகிறேன். அந்த அடிப்படையில் 'உத்தர மேரூர் உலா' முதல் நூல் ஆகிறது. பயண நூல் வரிசையில், இது மிகவும் வித்தியாசமானது!

விரிவான வரலாற்றுச் செய்திகள், செவிவழிக் கட்டுக் கதைகள், சுவையான துணுக்குச் சங்கதிகள், நிகழ்கால உண்மைகள், நாளைய நம்பிக்கைகள் என்று பல தகவல்களை இந்தப் புத்தகத்திலிருந்து பெறலாம்!

ஆனாலும் சிலருக்கு, 'இதில் நம் ஊரைப் பற்றிய செய்தி இல்லையே...' என்கிற ஆற்றாமை ஏற்பட வாய்ப்பு இருக்கலாம்.

குற்றம் என்னுடையதல்ல. ''இந்தக் கிராமத்தில் ஒண்ணும் விசேஷம் இல்லேங்க... இங்கே அப்படி யாரும் பெரிய ஆள் கிடையாதுங்க...'' என்று பற்றில்லாமல் பதில் கிடைத்தாலும், நான் ஆத்மார்த்தமாகவே அலைந்தேன்; அக்கறையுடனே ஊர்களைப் 'படித்'தேன்.

தகுதியான இடங்களும், பெயர்களும் விடுபட்டதாக யாரும் கருதினால் - எனக்கு எழுதலாம்; அடுத்த பதிப்பில் அவசியம் இணைப்பேன்.

பொதுவாக, 'உத்தரமேரூர் உலா' மூலம் - தாழை பூக்காத உத்தரமேரூர் தொடங்கி, செந்தாழை மணக்கிற கடல் மங்கலம் வரை எளிதாக வலம் வரலாம்!

மீண்டும் இன்னொரு நூல் மூலம் சந்திப்போம். நன்றி; வணக்கம்.

என்றும் உங்கள்,



இலக்கிய வீதி

விநாயகநல்லூர்,
வேடந்தாங்கல் அஞ்சல் - 603 314.



# உத்தரமேரூர் உலா

துளசிச் செடியின் எல்லாப் பகுதிகளும் மணக்கி றாற் போல், தொண்டை நாட்டிலுள்ள எந்த இடத்திற்கும் தொன்மைச் சிறப்புடன் கூடிய வரலாற்று வாசனை உண்டு.

அந்த வகையில், 'உத்தரமேரூருக்கு என்றென்றும் ஓர் உயி ருள்ள புகழிருக்கிறது!' என்றால் மிகையல்ல.

செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டத்தின் குறிப்பிடத்தகுந்த அங் கமாக விளங்கும் உத்தரமேரூர் வட்டத்தில், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலப்பாங்குகளும் பொருந்தி உள்ளன.

இதை உணர்த்தும் நிலையில், 'வேதாத்திரி, மல்லியங் கரணை, மருதம், நெய்யாடுபாக்கம், அரசாணிப்பாலை என்ற பெயர்களை உடைய ஊர்கள் இங்கே அமைந்திருக்கின்றன.

---

☐ இனியவன்

இப்பகுதியில் உள்ள திருமுக்கூடல், இந்த வட்டாரச் சிறப்பின் இதயம் போன்றதாகும். இங்கே ஒரு வடமொழிக் கல்லூரி கூட நிறுவப்பட்டு, எல்லாச் சாதியினரும் கல்வி 'யின்றதாய்க் கல்வெட்டுகள் உரைக்கின்றன.

உத்தரமேரூர் வட்டத்தில் - அரும்புலியூர், புலிவாய், திருப்புலிவனம், புலியூர், புலிப்பாக்கம் என்று சில கிராமங்கள் உள்ளன. 'ஒரு காலத்தில் இங்கே அடர்த்தியான காடுகள் இருந்தன என்பதற்கு, இவையே சான்றுகள்!' என்பர்.

மேலும், 'புலிக்கொடி மன்னர்களான சோழர்கள் இங்கே நெடுங்காலம் நிலைத்து ஆண்டதால், புலியுடன் இணைந்த ஊர்ப் பெயர்கள் ஏற்படக் காரணமாயிற்று!' என்றும் சொல்கிறார்கள்.

இந்தப் பகுதியின் வேறு சில ஊர்ப் பெயர்களுடன் - 'மங்கலம்', 'பூண்டி', 'பாடி' என்னும் சொற்களும் பொருந்தி உள்ளன.

''உத்தரமேரூரின் பெருமைகள் கொஞ்ச நஞ்சமல்ல. இதிகாச - வரலாற்றுக் காலம் தொட்டே இந்த ஊர் உயர்ந்தோங்கிய புகழுடன் திகழ்ந்திருக்கிறது! '' என இந்த ஊர் மக்கள் பெருமிதத்துடன் பேசுகிறார்கள்.

பழந்தமிழ் நாட்டிற்குத் தன்னாட்சி என்பது புதிதல்ல. முடி அரசர்கள் காலத்திலேயே, குடியரசு அறிமுகம் செய்யப்பட்டிருந்தது! என்றாலும், உத்தரமேரூரில் மட்டுமே 'ஊராட்சி முறை' மிகச் சிறந்த வகையில் நடைமுறைப் படுத்தப்பட்டது!

'முற்போக்கான அரசியல் நிர்ணய சட்டங்களாலும், மக்கள் மேம்பாட்டிற்கு இதயபூர்வமாக உழைத்த ஆட்சி நெறிகளாலும் இந்த ஊர் அடைந்த சிறப்புக்கு இணையே இல்லை!' என்பது ஆராய்ச்சி அறிஞர்களின் ஆழமான முடிவாக இருக்கிறது.

'உத்தரமேரூர் வட்டத்தை, நூற்று அறுபத்து நான்கு வருவாய்க் கிராமங்கள் கொண்ட ஒரு பிரம்மாண்டமான பூங்கொத்து!' என்று சொல்லலாம். இவ்வளவு அதிகமான ஊர்களைத் தன்னகத்தே கொண்டு, ஒரே ஒன்றியமாகச் செயல்பட்டு வரும் சிறப்பும் உத்தரமேரூருக்கு உண்டு!

உத்தரமேரூர் ஊராட்சி ஒன்றியம்தான், தமிழ் நாட்டிலேயே மிகப் பெரிய ஊராட்சி ஒன்றியம்!'இந்திய அளவிலும் கூட மிகப்

பெரிய ஊராட்சி ஒன்றியம்' என்கிற சிறப்பை, உத்தரமேரூர் ஒன்றியமே பெற்றிருக்கிறது!

இவ்வளவு மேன்மைகள் நிறைந்த உத்தரமேருர் பற்றியும், அதன் முக்கிய உறுப்புகள் போன்ற சில ஊர்கள் பற்றியும் உணர்த்துவதே இந்த நூலின் நோக்கம். இதன் மூலம் - நமது மண்ணின் மாண்பும், மக்கள் வாழ்வு, ஏற்றமிகு வரலாற்றுச் செய்தி கள் முதலியவற்றை இதயத்தில் பதித்துக் கொள்ளலாம்.

'நாமிருக்கும் நாடு நமதென்பதறிவோம்' என்றார் மகாகவி பாரதி. அது மட்டும் போதாது. நம்முடைய மண்ணின் மாண்பு களை ஓரளவாவது நாம் உணர்ந்திருக்க வேண்டும்.

முன்னோரின் வரலாற்று வாசனையை நுகர நுகர, நம்முள் ஒரு புத்துணர்ச்சி பரவும்! புது வேகம் பிறக்கும்! பாவேந்தர் சொன்னாற் போல், 'புதியதோர் உலகு செய்ய'ப் புறப்படும் முனைப்பு வரும்!

அந்த வகையில் - உத்தரமேரூர் உலா, 'ஓர் ஒப்பற்ற உலாவாக அமையும்!' என்பது உறுதி.



# உத்தரமேரூர்



'ஆயிரத்திருநூறு மறையோரும் வாழும் உத்தர மேரூர்' என்று இந்த ஊரின் பெருமையைப் பேசுகிறது, திருப் புகழ்.

ஆதியில் - 'வேதாத்திரி, மகாமேரு சைலம், தசாவதார க்ஷேத்ரம், தட்சண விசால க்ஷேத்ரம், பார்கவபுரி, பிருகுவாரண்யம், பஞ்ச வரத க்ஷேத்ரம், ஆதித்யபுரி, ஹரிஹரபுரி, விக்ரமாபரண சதுர்வேதி மங்கலம், மணித்லதீல மங்கலம், என்றெல்லாம் ஏராளமான பெயர்கள் உத்தரமேரூருக்கு இருந்தன.

ஆனால், 'மேரூர்' என்றே இந்த ஊர் நீண்ட நெடுங்காலமாய்க் குறிப்பிடப்பட்டு வந்திருக்கிறது. இதற்குக் காரணம், மேரு

மலை போன்ற கோபுரம் தாங்கிய கோயில்கள் இங்கே இருந்திருக் கின்றனவாம்!

பிற்காலத்தில், தஞ்சைப் பெரிய கோயில் விமானத்தை, 'தட்சணமேரு' என்று சொல்வது மரபாயிற்று. எனவே, 'மேரூர்' என்னும் ஊர்ப்பெயர், திசையோடு இணைந்து, 'உத்தரமேரூர்' என அழைக்கப்படலாயிற்று.

இந்தப் பெயர் ஏற்பட்டதற்கு இன்னொரு காரணமும் கூறப் படுகிறது. களப்பிர இன அரசனான 'உத்தரமேரு' இந்தப் பகு தியை ஆண்டதால், அவன் பெயருடனும் இந்த ஊரைப் பொருத் திப் பேசுகிறார்கள். பஞ்ச பாண்டவர் வனவாசத்தின்போது, விராடன் மகன் உத்தரன் இங்கு ஆட்சி செய்ததால் 'உத்தரமேரூர்' என்றாயிற்று என்பாரும் உள்ளனர். இப்படிப் பல கருத்துகள் நிலவினாலும், 'உத்தரவர்மன்' என்னும் பல்லவ மன்னனால் இப்பெயர் வழங்கப்பட்டிருக்கலாம் என்று கொள்ள நிறைய இடமிருக்கிறது.

ஊரின் மேற்கே - 'ராஜா மேடு', 'மாளிகை மேடு' என இன்று பேசப்படுகிற பகுதிகளில் - 'அரண்மனைகள் இருந்தன' என்று சொல்கிறார்கள். சரித்திர அடிப்படையிலான கணிப்பின் படி, பல்லவர் காலத்தில் 'உத்தரமேரூர் நகரம்' தோன்றியிருக்கி றது. இந்த நகரத்தை அமைப்பதற்கான திட்டங்கள், பல்லவ அரசர்களால் அக்கறையுடன் வகுக்கப்பட்டன.

பிற்காலத்தில் பல்லவர்களுக்கும், சோழர்களுக்கும் இடை யில் நிகழ்ந்த போரில் உத்தரமேரூருக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படவில்லை!

முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில், உத்தரமேரூரின் சிறந்த வளமை உலகுக்கு முழுமையாகப் புலப்படுத்தப்பட்டது. சோழர் காலத்தில், செம்பியன்மாதேவி பெயரால் இங்கே ஒரு மண்டபம் இருந்திருக்கிறது.

சோழர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, உத்தரமேரூர், காஞ்சியு டன் இணைந்து மேலும் பிரபலம் அடைந்தது. விஜய நகர மன்னர்கள் காலத்தில், உத்தரமேரூரின் முன்னேற்றம் மிகுந்தது.

அரசியல் மேன்மைக்கும் ஆன்மீகத் தூய்மைக்கும் மிக நல்ல சான்றாகத் திகழ்ந்த உத்தரமேரூர், பல்லவப் பேரரசின் உள்நாட்டுப் பகுதியில் அமைந்து அணி செய்திருக்கிறது.

இன்றைய உத்தரமேரூர் - மதுராந்தகம், செங்கல்பட்டு, காஞ்சிபுரம், வந்தவாசி, சேயாறு ஆகிய ஊர்களின் நடுவே - பாலாற்றின் தெற்கே - சேயாறு உலா வரும் பகுதியில் அமைந்திருக்கிறது. இங்கிருந்து ஒவ்வோர் ஊரின் தூரமும் ஏறத்தாழ 27 கிலோ மீட்டர்தான்! சென்னைக்கும் உத்தரமேரூருக்கும் உள்ள தொலைவு: 80 கிலோ மீட்டர்.

பொதுவாக, ஓர் ஊரில், 'வலம்புரி விநாயகர் கோயில் ஒன்று இருந்தாலே விசேஷம்' என்பர். இங்கோ, மூன்று வலம்புரி விநாயகர் கோயில்கள் உள்ளன!

பெருஞ்செல்வம் படைத்தவர்கள் அல்லது, மன்னர்கள் வாழும் இடங்களில் மட்டுமே இவ்வாறு அமைய அனுமதி இருப்பதாகச் சொல்கிறார்கள். இதன் மூலம், ஒரு காலத்தில் இந்த ஊர் இருந்த உன்னத நிலையை உணர்ந்து ஊகிக்கலாம்.

உத்தரமேரூரின் பழைய நகர அமைப்பு, அழகு நிறைந்தது; அரசர்களின் நேர்முக அக்கறை காரணமாக, அனைவரும் போற்றும்படியானது. நேர்நேரான வீதிகளும், இடையிடையே ஒழுங்கு நிறைந்த சிறு சிறு தெருக்களுமாக நீண்ட சதுரப் பாங்குடன் அது விளங்கிற்று.

புதுவையில் எந்தச் சாலையும் கடலைச் சந்திக்கிற மாதிரி, உத்தரமேரூரின் ஒவ்வொரு சந்தும் பிரதான வீதியுடன் சங்கமம் ஆகும்!

ஊரின் ஒவ்வொரு மூலையிலும் ஒரு குளம் இருந்தது; அந்தப் பெரிய குளங்களின் அருகே, சிறிய குளங்கள் வேறு இருந்தன! இப்போது, இந்த வரலாற்று உண்மைகளின் சுவடுகளை நாம் அதிகம் காண முடியாது. பழைய நகரின் பெரும் பகுதி புதைந்து போனதாக அல்லது அழிந்து போனதாகச் சொல்கிறார்கள். "இது, எட்டுத் திக்குகளில் பல்வேறு அரண்கள் நிறுவி அமைக்கப்பட்ட ஊர்!" என ஆன்றோர்கள் வர்ணிக்கிறார்கள்.

ஊரின் நான்கு திசைகளிலும் மாதுரியம்மன், எல்லையம்மன், மேல்கட்டம்மன், துர்க்கையம்மன் கோயில்கள் நிறுவப்பட்டுள்ளன.

மங்கலம், காரியமங்கலம், அரசாணிமங்கலம், கடல்மங்கலம் என்ற சான்றோர் ஊர்கள் உத்தரமேரூரைச் சூழ்ந்துள்ளன.

மணித்தோட்டம் என்னும் ஊரை, பெரியதோர் ஆராய்ச்சி மணி இருந்த இடமாய்க் கொள்ள முடிகிறது.

அத்தனை திக்குகளிலும், உழைப்பாளி வர்க்கக் குடியிருப்புகள் பழைய ஏற்பாடுகளாகவே உள்ளன.

குதிரைப் படைகளுக்கான கொள்ளுமேட்டுத் தெரு, யானைப் படைகளுக்கான யானைகட்டி தெரு, வணிக வசதிக்கான வண்டிக்காரத் தெரு போன்றவை அரசாட்சி நடந்த இடம் என்பதை விளக்கும்.

யானைகளைக் குளிப்பாட்டிய இடம், 'ஆனைப்பள்ளம்' என்று இன்றும் அழைக்கப்படுகிறது.

பழைய சிற்ப சாத்திரப்படி அமைந்த இந்த நகரில், பதினொரு முக்கியக் கோயில்கள் உள்ளன. இவற்றுள் சுந்தர வரதப் பெருமாள் கோயில், வைகுந்தப் பெருமாள் கோயில், பாலசுப்பிரமணிய சாமி கோயில், கயிலாசநாதர் கோயில், கேதாரீஸ்வரர் கோயில் போன்றவை மிகவும் குறிப்பிடத்தக்கவை.

உத்தரமேரூரில் நிர்மாணிக்கப்பட்ட நவமூர்த்தி விதானம், 'மரீசு' சிற்பக்கலைக்கு ஏற்ப அமைந்துள்ளது.

ஊருக்கு மேற்கே பெருமாள் கோயிலும், வடகிழக்கே ஈசன் கோயிலும் அமைந்திருப்பது ஊரமைப்பின் மிக நல்ல அம்சங்களாகும்.

இவ்வூர்க் கோயில்களில், 'இரட்டைத் தாளீஸ்வரர் கோயில்', 'தர்மராஜா கோயில்' ஆகியவையும் குறிப்பிடத்தக்கவையே.

தர்மராஜா கோயிலுக்குப் பக்கத்தில், ஒரு பிரம்மாண்டமான துரியோதனன் உருவம் காணப்படுகிறது. தரையில், வீழ்ந்த கோலத்தில் கிடக்கும் இந்தக் 'கொடும்பாவி' மண்ணால் சமைக்

கப்பட்டிருக்கிறது. இந்த அசுரத்தனமான வடிவத்தின் மேல் புல்லும், முள்ளும், செடியும், கொடியும் மண்டியுள்ளன.

காஞ்சிபுரத்திற்கு ஏராளமான சிறப்புகள் உண்டென்பது உண்மைதான். பல்வேறு சமயங்களுக்கும் அங்கே இடமிருக்கிறது என்றாலும், சைவ - வைணவச் சண்டைகள் எப்போதும் நிகழ்ந்த படியே இருக்கும்.

ஆனால், உத்தரமேரூரில் எந்நாளும் அப்படி ஒரு சூழ்நிலை ஏற்பட்டதே இல்லை!

உத்தரமேரூர் சுந்தரவரதப்பெருமாள் கோயிலில், ஆதிநாதர் என்கிற ரிஷப தேவரின் திருவுருவம் காணப்படுகிறது. இதன் மூலம், அன்றைய உத்தரமேரூரில் சமணர்கள் கலந்து வாழ்ந்ததை அறிய முடிகிறது!






ஒரு காலத்தில், உத்தரமேரூரை ஆண்ட மன்னன் அவையில் பல புலவர்கள் இருந்தனர். தலைமைப் புலவரின் பெயர் அறிவாகரன். அவர் மனைவியின் பெயர் சந்திரகாந்தம். இருவரும், இல்லற தர்மத்தின் இலக்கணமாகவும், இலக்கியமாகவும் திகழ்ந்தனர். அந்தக் கற்புக்கரசியை 'நங்கை நல்லாள்' என்று ஊரே போற்றியது.

ஒரு சமயம், சந்திரகாந்தம், கணவரின் அனுமதியோடு அயலூரில் உள்ள தன் பெற்றோரைக் காணச் சென்றிருந்தாள்.

இந்த நேரத்தில், அரசவைப் புலவர்களை நோக்கி, ''பிறந்தசையாப் பெற்றியது எது?... பேரொளியின் திறன் தெரிந்து ஓதுவது எது?'' என மன்னன் கேட்க, அறிவராகன் உட்பட எவராலும் மறுமொழி சொல்ல இயலவில்லை!

''நாளைக்குள் சரியான பதில் சொல்லவில்லையானால், சிரச்சேதம் செய்துவிடுவேன்!'' என்று கூறி, சபையைக் கலைத்தான் மன்னன்.

எல்லாப் புலவரும் இரவோடு இரவாகத் தலை மறைய, அறிவாகரன் மட்டுமே எஞ்சினான்.

பிறந்த வீடு போன நங்கைநல்லாள், புகுந்த வீடு திரும்புகையில் - குறும்பு மனம் படைத்த ஊர்ப்பெண்களில் சிலர், கூந்தல் நிறையத் தாழம்பூ மணக்க, மயில்களுடன் உல்லாசமாக விளையாடியபடி, ''இன்னும் சிறிது, நேரத்தில் இவள் கணவன் தலை உருளப்போகிறது. இவளானால், இவ்வளவு தாமதமாக ஊர் திரும்புகிறாளே!'' என்று ஏளனமாகச் சிரித்தார்கள்.

இதனால் சீற்றம் கொண்ட நங்கை நல்லாள், ''இந்த ஊர்ப் பெண் எல்லை தாண்டி வாழமாட்டாள்! இவர்களின் தாலி தக்காது! இங்கே, இனி தாழை பூக்காது! மயில் பிழைக்காது!'' என்று சாபமிட்டபடியே அரசவைக்கு ஓடினாள்.

''பிறந்தசையாப் பெற்றியது முட்டை; பேரொளியின் திறன் தெரிந்து ஓதுவது சேவல்!'' என்று சொல்லிக் கணவன் உயிரை மீட்க முனைந்தாள்.

அரசன் மகிழ்ந்து, ''பதில் சொன்னவன் உன் கணவன் அல்ல என்பதால், தண்டனை தண்டனையே! ஆனால், நீ விரும்பும் விதத்தில் அதை நிறைவேற்றுவேன்!'' என்று வாக்களித்தான்.

''அவர் உயிர், வயோதிகத்தில் இயல்பாகப் போகவேண்டும்!'' என நங்கை நல்லாள் வேண்ட, ''அப்படியே!'' என அபயம் தந்தான் மன்னன்.

இவளுடைய சாபத்தால், உத்தரமேரூரில் தாழை பூக்காததுடன், மயில்களும் அழிந்தன! மணமாகி வெளியூர் சென்ற பெண்கள் விரைவில் அமங்கலிகளாக வீடு திரும்பலாயினர்!

தன் சாபத்தின் கடுமையை உணர்ந்து திடுக்கிட்டு உருகிய நங்கை நல்லாள், ஒரு குளத்தில் நீராடி மனமுருக இறைவனை வேண்டினாள். அந்தக்குளம், இன்றும் 'நங்கைகுளம்' என்று அழைக்கப்படுகிறது.

இளம் பெண்கள் இந்தக் குளத்தில் நீராடி, ஈசன் கோயிலில் இரட்டைத் தாளி ஏற்றி வணங்குவது இன்றும் இங்கே மரபாக இருக்கிறது! இதனால் பயன் கிட்டுவதாகவும் சொல்கிறார்கள்!

''ஆனாலும், இன்றளவும் கூட அந்த நங்கை சாபத்திற்கு ஒரு பலம் இருக்கிறது! என்ன இருந்தாலும், உள்ளூரில் வாழ்க் கைப்படும் பெண்கள் மட்டுமே சுபிட்சமாக இருக்கிறார்கள்!'' என்கிறார் ஒரு பெரியவர்.

'இப்போதும் கூட, இந்த ஊர் எல்லைக்குள் தாழை பூப்ப தில்லை!' என்பது ஓர் ஆச்சரியமான செய்தி! உத்தரமேரூர் எல்லையைத் தாண்டி, ஏராளமான தாழம் புதர்களில் மலர் மணம் கமழ்வது கண்கூடு! அதேபோல், இந்தப் பகுதியில், என்னதான் முயன்று மயில்களை வளர்த்தாலும், அவை பிழைப்பதே இல் லையாம்!

'முப்போகம் விளைந்தாலும் உப்பு வாங்க நெல் இருக்கா து..' என்று இந்தப் பகுதியில் ஒரு பழமொழி சொல்கிறார்கள்.

இது செங்கை மாவட்டம் முழுவதுமே சொல்லப்படுகிற பழமொழிதான். ஆனால், 'நங்கை நல்லாள் சாபத்தில் இது ஓர் அம்சம்' என்று ஊரார் உரைக்கிறார்கள்.

'கற்புக்கரசியான ஒருத்தி, நங்கை நல்லாள் என்று பேரெடுத் தவள், இப்படித் தாறுமாறான சாபம் தந்திருப்பாளா?' என்பது சிந்திக்க வேண்டிய செய்தி..



அருள்மிகு

# சுந்தரவரதப் பெருமாள் கோயில்



உத்தரமேரூரின் பேருந்து நிலையம் அருகே இருக்கிற வைகுந்தப் பெருமாள் கோயில், கல்வெட்டுகளால் புகழ் பெற்றது. ஆனாலும், இன்று அனைவராலும் வழிபட்டுப் போற்றப் படுவது, சுந்தரவரதப் பெருமாளே! இந்தக் கோயில், சுமார் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கும் முற்பட்டது, என்பதற்கு ஆதாரம் இருக்கிறது. வாஸ்து வித்தையில் திறன் பெற்ற பரமேசுவரத் தச்சனைக் கொண்டு, நந்திவர்ம பல்லவன் இதைக் கட்டுவித்தான். 'மயன் மதம்' என்ற நூலின் அடிப்படையில் இது கட்டப் பட்டிருக்கிறது.

வைணவத்தில் - வைகாநசம், பஞ்சராத்ரம் என்று இரண்டு விதமான ஆகம முறைகள் உண்டு. திருப்பதி, 'வைகாநச' ஆகமப் படி கட்டப்பட்டதாகும். அந்த ஆகம விதிப்படியே, உத்தரமேரூரிலும் வழிபாடு நடந்து வருகிறது.

வைகாநச ஆகமத்தில், 'சகஸ்ராதிக விப்ரக்ராமி' எனும் பிரமாண வாசகம் ஒன்று இருக்கிறதாம். அதன்படி, ஆயிரம் அந்தணர்க்கு மேல் வாழும் இடத்தில் மட்டுமே இப்படிப்பட்ட கோயில் கட்ட 'அக்காலத்து விதி' இடம் தந்தது.

'இது பதினாறாம் நூற்றாண்டுக்கு உரிய கோயில்' என்று உத்தரமேரூர்க் கயிலாசநாதர் கோயிலில் உள்ள கல்வெட்டு உரைக்கிறது.

இந்தக் கோயில் தவிர, இதே மாதிரி மூன்று கோயில்கள் தமிழ்நாட்டில் உள்ளன. இவற்றுள் காரைக்குடி திருக்கோட்டியூர்க் கோயிலும், மதுரைக் கூடலழகர் கோயிலும் குறிப்பிடத்தக்கவை.

இன்னொரு கோயிலான சென்னை பெசண்ட் நகர் அஷ்டலட்சுமி கோயில், உத்தரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயிலைப் பார்த்து அண்மையில் நிறுவப்பட்டதாகும்! 'சுந்தரவரதப்பெருமாள் கோயிலைக் கண்டு வியந்த காஞ்சிப் பெரியவர், பெசண்ட் நகர் கோயிலுக்கு வழி வகுத்திருக்கிறார்!' என்பது குறிப்பிடத்தக்கது.

இவை அனைத்திலும் - நவ மூர்த்திப் பிரதிஷ்டையுடன் கூடிய, அஷ்டாங்க விமானம், உத்தரமேரூரில் மட்டுமே உள்ளது!

திருமந்திரத்தின் எட்டெழுத்துகளை உணர்த்தும் வகையில், இந்த அஷ்டாங்க விமானம், மூலைக்கு இரண்டு முகமாக அமைந்துள்ளது. மேலும், இக்கோயில், வைணவத்தின் மூன்று இரகசியார்த்தங்களைக் குறிப்பிடும் மூன்று தலங்களைக் கொண்டிருக்கிறது.

ஆனால், இந்தக் கோயில் பற்றிய ஒரு புராணக்கதை 'இது துவாபர யுகக் கோயில்' என்கிறது!

துரியோதனன் சூழ்ச்சியால், அக்ஞாதவாசத்தின்போது, பாண்டவர்களுக்குப் பைத்தியம் பிடிக்க, நாரதரின் உபதேசத்தால் விமோசனம் தேடி உத்தரமேரூருக்கு வருகிறாள் பாஞ்சாலி.

தாயார் சந்நிதியை அடைந்து பிரார்த்திக்கிறாள். அப்போது, இறைவன், தருமனுக்கு வைகுந்த வரதனாகவும், பீமனுக்குச் சுந்தர வரதனாகவும், அர்ச்சுனனுக்கு அச்சுத வரதனாகவும், நகுலனுக்கு அநிருத்ர வரதனாகவும், சகாதேவனுக்குக் கல்யாண

வரதனாகவும், நாரதருக்கு யோக ரூபமாகவும் காட்சி தந்து அனுக்கிரகம் செய்கிறான்.

தன் வாழ்வுக்கு ஆனந்தம் தந்ததால், இறைவியை, 'ஆனந்த வல்லித் தாயார்' என்று போற்றுகிறாள் திரௌபதி.

'இப்படியாகப் பாண்டவர்க்கு அருள் செய்ததால், இது பஞ்ச வரத க்ஷேத்திரம் எனப்பட்டது!' என்கிறது, தல புராணம்.

இக்கோயிலின் முற்றுப் பெறாத ராஜ கோபுரத்தைத் தாண்டி உள்ளே நுழைந்தால், 'பிரம்மதீர்த்தம்' என்ற திருக் குளம் தெரியும்.

ஆஜானுபாகுவான அனுமன் சிலையைக் கடந்தால், கருடாழ் வாரின் சேவிப்புச் சிலை புலப்படும். கோயிலுள், அருள்மிகு சுந்தர வரதர் நின்ற கோலத்தில் தரிசனம் தருகிறார். உற்சவ மூர்த்தி, உன்னத அழகோடு உபநாச்சிமாருடன் காட்சி தருகிறார்.

உள் பிராகாரத்தை வலம் வருகையில், அச்சுத வரதன், ஆனந்தவல்லித் தாயார், அநிருத்ர வரதன் என்று ஒவ்வொரு திக்கிலும் மனம் நிறைந்த கோலங்கள் தெரிகின்றன.

கோயிலின் முதல் தளத்தில், கிழக்கு நோக்கினாற் போல், வைகுந்தப் பெருமாள் - அமர்ந்த கோலத்தில் தரிசனம் தருகிறார்.

தெற்கே பார்க்கும் கிருஷ்ணார்ஜுனன், மேற்கே நோக்கும் யோக நரசிம்ம மூர்த்தி, வடக்கே பார்க்கும் இலட்சுமி வராக மூர்த்தி என்று இங்கே உள்ள வடிவங்களில் எழில் கொஞ்சுகிறது.

இத்தளத்தின் வெளியில் நின்று பார்த்தால், அஷ்டாங்க விமானத்தின் அழகு முழுமையாகத் தெரியும்.

அடுத்த தளத்தில், திருவரங்கநாதர், தெற்கே சிரம் வைத்து- தரிசனத்திற்குப் போவோரை நோக்கியபடி படுத்திருக்கிறார்.

மரீசு மகரிஷியும், மார்க்கண்டேயரும், பிரும்மாவும், ஸ்ரீதேவியும் இவரை வணங்கும் நிலையில் இருக்கிறார்கள்.

இக்கோயிலின் மூன்று நிலைகளில் உள்ள மூல மூர்த்திகள், அத்தி மரத்தால் உருவானவை என்பது குறிப்பிடத்தக்கது.

அவை, அணுவளவும் பழுதுறாத வண்ணம் காலத்தை வென்று அருட் கோலத்துடன் துலங்குகின்றன!

1972-73 களில் ஸ்ரீமத் வேதாந்த ராமானுஜ மகாதேசிகன் அருளாசியுடன், ஊர்ப் பெரியவர் காலஞ்சென்ற வழக்கறிஞர் ராமானுஜாச்சாரியார் தலைமையில் பழைமைக்கு ஊறு நேராத வாறு கோயில் புதுப்பிக்கப்பட்டது.

இக் கோயிலின் பிரம்மோற்சவம், ஆண்டுதோறும் சித்திரையில் நடைபெறும்.

ஆங்கிலேயத் தளபதி சர் அயர்கூட் என்பவன், வந்தவாசி முற்றுகையின் போது சுந்தரவரதப்பெருமாள் கோயிலருகே தன் சேனைகளுடன் முகாமிட்டு வெற்றி பெற வழிபட்டதாக இங்கே ஒரு செய்தி நிலவுகிறது!





அருள்மிகு

# பாலசுப்பிரமணிய சுவாமி கோயில்

அருணகிரிநாதர் இந்தத் திருத்தலம் பற்றி அகம் சிலிர்க்கப் பாடியுள்ளார். திருப்புகழின் நான்கு பாடல்கள், இங்குள்ள சுயம்பு சாமியின் மேன்மைகளை மனம் கனிந்து பேசக் கூடியவை.

'குன்று தோறும் குமரன் இருப்பான்' என்ற வாசகத்திற் கேற்ப, ஒரு குன்றை ஒட்டியே இக்கோயில் அமைந்துள்ளது. 'இதுவும் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில்' என்பது அறிந்தோர் கூற்று.

இது - கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம், மகாமண் டபம், வெளிமண்டபம் என ஐந்து பிரிவுகளாக அமைந்துள்ளது.

சூரசம்மாரத்திற்கு முன், 'வேல் பெற வேண்டி' முருகன் இங்கே தவக் கோலத்தில் நின்றானாம். எனவேதான், இந்தச் சந்நிதி எதிரே யானை வாகனம் நிறுவப்பட்டுள்ளது! சூரசம்மாரத் திற்குப் பிறகே முருகனுக்கு மயில் வாகனம் ஏற்பட்டதாக ஐதீகம்!

பீடமில்லாத - அஷ்டபந்தனம் செய்யப்படாத - சுயம்புவான தவக்கோல முருகர், மிகவும் சாந்த சொரூபமானவர்.

முகம் ஒன்று! ஆனாலும் திருக்கைகள் நான்கு! ஜடா முடியு டன் கழுத்திலும், உடம்பிலும் மாலை மாலையாய் உத்திராட்சங் கள் அணிந்திருக்கிறார்! இடுப்பில் யோக பட்டிகை!

வலப்புறக் கீழ்த் திருக்கை, சற்றே வளைந்து அபய முத்திரை காட்டுகிறது; மேல் திருக்கை வச்சிராயுதம் தாங்கி இருக்கிறது. இடப்புறமுள்ள கீழ்த் திருக்கை தொடை மீது விளங்க, மேல் திருக்கை 'கிண்டி'யைத் தாங்கியுள்ளது.

நான்கு கைகளிலும், உத்திராட்சங்களுடன் நாகாபரணங்கள்; செவிகளில் உத்திராட்சக் குண்டலங்கள்.

கருவறையின் தென் மேற்கு மூலையில் - சோமநாதர் என்ற சிவலிங்க மூர்த்தியும், வடக்கே திரிபுர சுந்தரியும், நேர்க் கீழே நந்தியும், அருகே விநாயகரும் ஒரே மேடையில் இருக்க - இவர்களை நோக்கியே முருகன் தவமிருக்கிறான்!

உற்சவ மூர்த்தி, கஜ - வள்ளியோடு அமைந்த அழகு மிகு ஆறுமுகம். கலை நுட்பம் மிகுந்த தேவ மயில் மேல் அமர்ந்து, ஒரு காலை நாகத்தின் மேல் வைத்திருக்கிற அழகு வேறெங்கும் காணக்கிடைக்காதது.

இந்த முருகன் கோயிலின் அருகிலேயே, சுந்தரவரதப் பெரு மாள் கோயிலும் அமைந்து, சைவ - வைணவ ஒற்றுமைக்கு வழி வகுத்துள்ளது!

இவ்விரு கோயில்களுக்கும் வேத பாராயண மான்யம், மேள மான்யம், நட்டுவாங்க மான்யம் என்று ஒரே பகுதியில் நிலம் ஒதுக்கப்பட்டிருந்தது!





அருள்மிகு

# கயிலாசநாதர் கோயில்

உத்தரமேரூரில் உள்ள கயிலாசநாதர் கோயில், இன்று பல இடிபாடுகளுடன் காணப்படுகிறது.

காஞ்சிபுரத்துக் கயிலாசநாதர் கோயில் மாதிரியே இதுவும் அமைந்துள்ளது. இது பல்லவ மன்னர்களின் கலை ஆர்வத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

'இதே பாணியில் அமைந்த கோயில்கள் எல்லோராவிலும், கர்நாடக மாநிலத்தின் பட்டிக்கல்லிலும் மட்டுமே உள்ளன!' என்பது இதற்கு இன்னொரு சிறப்பாகும்.

இந்தக் கோயிலைச் சுற்றிலும், கல்வெட்டுகள் மிகுதியாக உள்ளன. இவ்வூரின் ஏனைய கோயில்களைப் பற்றிய செய்திகளோடு, அன்றைய அரசியல் விவரங்களும் அவற்றுள் பொதிந்துள்ளன.

கேதாரீஸ்வரர் கோயிலிலும் கூட, கல்வெட்டுகள் மிகுதியாய்க் காணப்படுகின்றன. அவை, உத்தரமேரூரை 'இராஜேந்திர சோழ சதுர்வேதி மங்கலம்' என்கின்றன.



# உலகப் புகழ் பெற்ற கல்வெட்டுகள்

உத்தரமேரூர் - நகரமைப்பாலும், கோயில்களாலும் மட்டுமல்லாமல் ஆட்சி முறையாலும் அரியதோர் இடமாகச் சிறந்து விளங்கியது. வைகுந்தப் பெருமாள் கோயிலில் இருக்கிற கல்வெட்டுகள், உலகப் புகழ் பெற்றவை. இவை, சோழர் ஆட்சி முறையின் சிறப்பை விரிவாகச் சொல்கின்றன!

இந்தப் பகுதியை ஆண்ட மன்னர்கள் அனைவரும் அனேக மாக, குடியரசு முறையையே தழுவி இருக்கிறார்கள்!

ஆதம்பாக்கம், காவேரிப்பாக்கம், திருவல்லம், திருப்பாற் கடல், திருக்கடலூர், திருத்தணி, அன்பில், உக்கல், கூரம், மணலி, மானூர் போன்ற ஊர்களில் தமிழக ஊராட்சி முறை அனுசரிக்கப் பட்டதற்கு எத்தனையோ கல்வெட்டுகள் சாட்சி சொல்கின்றன!

இவை அனைத்திலும், 'உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்துச் சபை' மிகவும் புகழ் பெற்று விளங்கிற்று. கே.ஏ.நீலகண்டசாஸ் திரி, எஸ்.கிருஷ்ணசாமி அய்யங்கார் என்று பல வரலாற்றுப் பேரறிஞர்கள் இந்த ஊர்க் கல்வெட்டுகள் பற்றிப் புகழ்ந்து எழுதி இருக்கிறார்கள்!

மேலும், ஃப்ரெஞ்ச் மொழியில் கூட உத்தரமேரூரைப் பற்றி ஒரு பயனான நூல் வெளியாகி உள்ளது! இந்த நூலை, புதுச்சேரியி லுள்ள ஃப்ரெஞ்சுக் கழகத்தார் வெளியிட்டு இருக்கிறார்கள். இந்திய இயல் வெளியீட்டிற்காக, ஃப்ரெஞ்சு அறிஞரின் அக்கறை யோடு இது உருவாகி உள்ளது. டாக்டர் 'ருரோ' என்பவர் இந்த நூலைத் தயாரிக்கக் கடுமையாக உழைத்திருக்கிறார்.

பிற்காலப் பல்லவர்களின் ஆட்சிக்காலம் தொட்டு - இந்த ஊர் நிறுவப்பட்டதிலிருந்து - தொடர்ந்து ஆட்சி செய்த பல்வேறு அரச வம்சத்தினரின் காலங்களில் உத்தரமேரூர் பெற்றிருந்த முக்கியத்துவமும், வளர்ச்சி நிலைகளும் இந்நூலில் படிப்படியாக விவரிக்கப்பட்டுள்ளன.

உத்தரமேரூர் ஊராட்சி முறை குறித்து விரிவாகப் பேசும் இந்தப் புத்தகம், பண்டைக்கால மக்களின் சமூக வாழ்க்கை, பண்பாடு பற்றிய தகவல்களையும் தெரிவிக்கிறது. மேலும், உத்தரமேரூர் பற்றிய ஃப்ரெஞ்ச் நூலில், கற்போரை வியக்க வைக்கும் கல்வெட்டுகளின் பட்டியல்கள் காலவாரியாகப் பதிப் பிக்கப்பட்டுள்ளன. அத்துடன், தொல்பொருள் ஆராய்ச்சித் துறை யினரின் செறிவான கண்ணோட்டமும் இதில் தெளிவாக அமைந் திருக்கிறது. உத்தரமேரூர்ப் பகுதியில் காணப்படும் கட்டடக் கலை, சிற்பக்கலை குறித்து ஆராய்பவர்களுக்கு, இந்த நூல் ஓர் அரிய கலைப் பெட்டகமாகத் திகழ்வதாக அறிஞர்கள் கூறுகிறார் கள்.

ஊராட்சித் தேர்தல் விதிகள், ஒழுங்கு முறைகள், வேட்பாளர் ஆவதற்கான தகுதி- தகுதியின்மைகள் முதலிய சரியான செய்தி கள் அனைத்தும், உத்தரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயிலின் மேற்குச் சுவரில் விரிவாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இந்தக் கல்வெட்டுகள் - முதலாம் பராந்தக சோழன் காலத் தில் வெட்டப்பட்டவை என்பது வரலாற்று வல்லுநர் முடிவு.

இங்குள்ள கல்வெட்டுகளில், 'குடும்பு', 'கண்ணாறு' போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. 'ஒரு கண்ணாறு' என்பது முப்பது கோல் சதுரமாகும். இப்படியான 'இருபது கண்ணாறு', 'ஒரு குடும்பு' எனப்பட்டது. புகழ் நிறைந்த இந்தக் கல்வெட்டு கள் மூலம், உள்ளாட்சித் துறைக்கு, 'ஒரு குடும்பு'க்கு ஒருவர்

*வீதம் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள் என்கிற செய்தி தெரிகிறது!*

*ஊர் வளம் ஓங்கவும், மக்கள் வாழ்வு மேன்மையுறவும் இந்த ஊராட்சி உறுப்பினர்கள் எல்லாரும் உண்மையாகப் பாடுபட்டார்கள்!*

*நெறி தவறியவர்கள், ஊராட்சி அமைப்பில் அங்கம் வகிக்கவே முடியாது!*

*அது மட்டுமல்ல; அவர்களின் உறவினர்களுக்கும் கூட, இவர்கள் நேர்மையானவர்களாக இருந்தாலும், பதவி கிடைக்காது!*

*நேர்மை முறிந்தவர்களின் எட்டிய சொந்தக்காரர்கள் கூட, தேர்தலில் நிற்கும் அருகதையை இழந்து போவார்கள்!*

*உத்தரமேரூர்க் கல்வெட்டிலுள்ள தேர்தல் சட்டதிட்டங்களைப் பார்க்கிறபோது, இன்று, அவற்றுக்கு உட்பட்டு ஆட்சியில் நிலைக்க யாராலும் இயலாது!*





# புகழ் நிறைந்த உத்தரமேரூர் ஊராட்சிக் கல்வெட்டு விவரம்

**அரசன்:** ஸ்வஸ்திஸ்ரீ மதுரை கொண்ட கோப்பரகேசரி வன்மர்க்கு.

**காலம்:** யாண்டு பதினாறு.

**ஊர்:** காளியூர்க் கோட்டத்து, தன் கூற்று. உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்துச் சபையோம்.

**அரசு ஆணை:** இவ்வாண்டு முதல் எங்களுக்குப் பெருமானடிகள் எம்பெருமான் ஸ்ரீவீரநாராயணன், ஸ்ரீபராந்தக தேவன், ஸ்ரீபரகே சரி மன்னருடைய ஸ்ரீமுகம் வரக்காட்ட ஸ்ரீமுகப்படி ஆக்ஞையி னால்.

**அரசு அதிகாரி:** சோழ நாட்டுப் புறங் குறும்பை நாட்டு ஸ்ரீ வங்க

நகர் கரஞ்சை கொண்டய க்ரமவித்தபட்டன் ஆகிய சோமாசி பெருமான் இருந்து.

**ஊரார் எடுத்த முடிவு:** வாரியமாக ஆட்டொருகாலும் சம்வத்ஸர வாரியமும், தோட்ட வாரியமும், ஏரி வாரியமும் இடுவதற்கு வ்யவஸ்தை செய்த பரிசாவது.

குடும்பு: குடும்பு முப்பது. முப்பது குடும்பிலும் அவ்வக் குடும்பி லாரே கூடி...

### தகுதியுடையோர்:

1. கால் நிலத்துக்கு மேல் அரை நிலமுடையான்.
2. தன் மனையிலே அகம் எடுத்துக் கொண்டு இருப்பான்.
3. எழுபது பிராயத்தின் கிழ், முப்பத்தைந்து பிராயத்தின் மேற்பட்டான்.
4. மந்திர பிரம்மாணம் வல்லான்.
5. ஓதுவித்தறிவான். அல்லது -
6. அரைக்கால் நிலமே உடையான் ஆயினும் ஒரு வேதம் வல்லானாய், நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்க ணித்து அறிவான்.
7. அவர்களிலும் கார்யத்தில் நிபுணன்.
8. ஆசாரம் - ஒழுக்க சீலம் - உடையான்.
9. அர்த்த சௌசமும் - பொருள் சுத்தம் - ஆன்ம சௌசமும்- மனச் சுத்தம்-உடையான்.
10. மூவாட்டின் இப்புறம் வாரியம் செய்திலான், பெயர் தீட்டி குடம்புக இடுவதாகவும்.

### தகுதியற்றோர் :

1. எப்பேர்ப்பட்ட வாரியங்களும் செய்து கணக்குக் காட்டாது இருந்தான்.
2. இவர்களுக்குச் சிற்றவை, பேரவை மக்கள்.
3. இவர்களுக்கு அத்தை, மாமன் மக்கள்.
4. இவர்களுக்குத் தாயோடு உடன் பிறந்தான்.
5. இவர்கள் தமப்பனோடு உடன் பிறந்தான்.
6. தன்னோடு உடன் பிறந்தான்.
7. இவர்களுக்குப் பிள்ளை கொடுத்த மாமன்.
8. இவர்கள் பிராம்மணியோடு உடன் பிறந்தாளை வேட்டான்.
9. உடன் பிறந்தான் மக்கள்.

10. தன் மகள் வேட்ட மருகன்.
11. தன் தமப்பன்.
12. தன் மகன்.
13. அகம்யாக மனத்திலும், மகாபாதகங்களில் முன் படைத்த நாலு மகாபாதகத்திலும் எழுதப்பட்டான்.
14. சம்ஸர்க்கப் பதிதரை பிராயச்சித்தம் செய்யும் ஆள்.
15. சாஹஸியராய் இருப்பான்.
16. பரதிரவ்யம் அபகரித்தான்.
17. எப்பேர்பட்ட கையூட்டும் கொண்டான்.
18. கிருத பிராயச்சித்தம் செய்து சுத்தனானான்.
19. பாதகம் செய்து, பிராயச்சித்தம் செய்து சுத்தனானான்.
20. கிராம கண்டகராய்ப் பிராயச்சித்தம் செய்து சுத்தனானான்.
21. அகம்யாகமனம் செய்து, பிராயச்சித்தம் செய்து சுத்தனானான்.

ஆக, இச்சுட்டப்பட்ட இத்தனையரையும் நீக்கி...

**தேர்தல் முறை:** முப்பது குடும்பிலும் குடவோலைக்குப் பெயர் தீட்டி, இப்பன்னிரண்டின் சேரியிலும் ஆக இக்குடும்பும் வெவ் வேறேவாய் ஓலை பூட்டி, முப்பது குடும்பும் வெவ்வேறே கட்டி, குடம்புக விடுவதாகவும். குடவோலை பறிக்கும்போது, மகா சபைத் திருவடியாரை, ஆபால விருத்தம் நிரம்ப உட்புகக் கொண்டு, அன்று உள்ளூரில் இருந்த நம்பிமார் ஒருவரையும், ஒழியாமே, மகாசபையிலே, உள் மண்டபத்திலே இருத்திக் கொண்டு, அந்நம்பிமார் நடுவே அக்குடத்தை நம்பிமாரில் விருத் தராய் இருப்பார் ஒரு நம்பி மேல்நோக்கி எல்லா ஜனமும் காணும் ஆற்றல் எடுத்துக் கொண்டு நிற்க, பகலே அநந்தரம் அறியாதான் ஒரு பாலனைக் கொண்டு, ஒரு குடும்பு வாங்கி மற்றொரு குடத்திற்கே புகவிட்டு, அக்குடத்தில் ஓர் ஓலை வாங்கி மத்யஸ் தன் கையிலே கொடுப்பதாகவும், அக்குடத்து ஓலை மத்யஸ்தன் வாங்கும்போது, ஐந்து விரலும் அகல வைத்து உள்ளங்கையில் ஏற்றுக்கொள்வானாகவும், வாசித்த அவ்வோலை, அம்மண்ட பத்து இருந்த நம்பிமார் எல்லோரும் வாசிப்பாராகவும், வாசித்த அப்பேர் தீட்டுவதாகவும்.

இப்பரிசே முப்பது குடும்பிலும் ஒரே பேர் கொள்வதாக வும்...

**வாரிய அமைப்பு :** இக்கொண்ட முப்பது பேரிலும் தோட்ட வாரியமும், ஏரி வாரியமும் செய்தாரையும் வித்யா விருத்தரையும், வயோவிருத்தர்களையும் சம்வத்ஸர வாரியங்களாய்க் கொள்வதாகவும், மிக்கு நின்றாருள் பன்னிருவரைத் தோட்டவாரியர் ஆகக் கொள்வதாகவும், நின்ற அறுவரையும் ஏரி வாரியர் ஆகக் கொள்வதாகவும். இவ்விரண்டு தரத்து வாரியமும் கரை கூட்டிக் கொள்வதாகவும்...

**காலமும் செயலும்:** இவ்வாரியம் செய்கின்ற மூன்று திறத்து வாரியப் பெரு மக்களும் முன்னூற்று அறுபது நாளும் நிரம்பச் செய்து ஒழிவதாகவும்...

**சிற்றம் புரிந்த வாரியம்:** வாரியம் செய்யா நின்றாரை அபராதம் கண்டபோது அவனை ஒழித்துவதாகவும்...

**செய்தாரை விலக்கல் :** இவர்கள் ஒழிந்த அநந்தரம் இடும் வாரியங்களும் - பன்னிரண்டு சேரியிலும் தன்ம கிருத்யம் கடைக்காலும் வாரியரே மத்யஸ்தரைக் கொண்டு குறி கூட்டிக் கொடுப்பாராகவும். இவ்வியவஸ்தை ஓலைப்படியே ... குடவோலை பறித்துக் கொண்டே வாரியம் இடுவதாகவும்...

**பஞ்சவார வாரியமும் பொன் வாரியமும்:** பஞ்ச வார வாரியத்துக்கும், பொன் வாரியத்துக்கும் முப்பது குடும்பிலும் குடவோலைக்குப் பெயர் தீட்டி, முப்பது வாய் ஓலைக்கட்டும் புக விட்டு, முப்பது குடவோலை பறித்து, முப்பதிலும் பன்னிரண்டு பேர் பறித்துக் கொள்வதாகவும்... பறித்த பன்னிரண்டிலும் அறுவர் பொன் வாரியமும், அறுவர் பஞ்சவாரியமும் ஆவனவாகவும் பிற ஆண்டும் இவ்வாரியங்கள் குடவோலை பறிக்கும்போது இவ்வாரியங்களுக்கு முன் நாம் செய்த குடும்பு அன்றிக்கே நின்ற குடும்பிலே கரை பறித்துக் கொள்வதாகவும்...

***கணக்கரின் தகுதிகள் :*** *அர்த்த சௌசம் - நாணயம் - உடையானே கணக்கு எழுதுவான் ஆகவும் கணக்குக் காட்டிச் சுத்தம் ஆச்சிதின் பின் அன்றி மற்று புகப் பெறாதான் ஆகவும்... மாற்றுக் கணக்கர் புக்கு ஒதுக்கப் பெறாதார் ஆகவும்...*

**அரசு ஆணை:** இப்பரிசே இவ்வாண்டு முதல் சந்திராதித்யவித் என்றும் குடவோலை வாரியமே இடுவதாக தேவேந்திரன்,

சக்ரவர்த்தி, பண்டித வத்ஸலன், குஞ்சரமல்லன், சூரசூளாமணி, கல்பக சரிகை, ஸ்ரீபரகேசரிபன்மார்கள், ஸ்ரீமுகம் அருளிச் செய்து வரக் காட்ட....

**அதிகாரி:** ஸ்ரீஆணையில் சோழ நாட்டுப் புறங் கறம்பை நாட்டு ஸ்ரீவங்கநகர் கரஞ்சை கொண்டய கிரமவித்தபட்டன் ஆகிய சோமாசிபெருமான் உடனிருந்து இப்பரிசு செய்விக்க...

**ஊரான் :** நம் கிராமத்துக்கு அப்புறமாக துஷ்டர் கெட்டு, வசிஷ்டர் வர்த்திப்பதாக வ்யவஸ்தை செய்தோம் உத்தரமேரூர் சதுர்வேதி மங்கலத்துச் சபையோம்....

**எழுதியோன் :** இப்பரிசு, குறியில் இருந்து பெருமக்கள் பணிக்க வ்யவஸ்தை எழுதினேன், சிவக்குறி இராஜமல்ல மங்கலப் பிரியனென்.



## தேர்தலும் வாரியங்களும்:

சங்க இலக்கியப் பாடல்களிலேயே சில உதாரணங்கள் தேர்தல்களை ஒட்டி அமைந்துள்ளன! எனவே, 'இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் நாட்டில் தேர்தல் முறைகள் அனுசரிக் கப்பட்டு வந்துள்ளன!' என்பது புலனாகிறது!

'இது ஓர் அழுத்தமான உண்மை' என்பதை, உத்தரமேரூர்க் கல்வெட்டுகள் உறுதி செய்கின்றன. இங்கே நடைபெற்ற தேர்த லுக்குக் 'குடவோலை முறை' என்று பெயர்.

முன்னாள் பிரதமர் ராஜீவ் காந்தி அவர்கள், உத்தரமேரூருக்கு வந்த பிறகே, இங்குள்ள கல்வெட்டுச் செய்திகளின் தாக்கத்தால் பஞ்சாயத்துகளுக்கு அதிக அதிகாரம் வழங்கி ஆணை பிறப்பித் தார்!

அந்நாளில், இந்தப் பகுதியை முப்பது தொகுதிகளாய்ப் பிரித்து, தொகுதிக்கு ஒருவர் வீதம் முப்பது பேர் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இவர்களுக்கென்று - சம்வத்சர வாரியம், ஏரி வாரியம், தோட்ட வாரியம், பஞ்ச வாரியம் என்று நிர்வாகங்கள் பகுக்கப் பட்டன.

முன்னாள் முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள், உத்தரமே ரூர்க் கல்வெட்டுக்களைக் கண்டே வாரியங்களை மீண்டும் உரு வாக்கினார்!

சம்வத்சர வாரியம் - ஆண்டு முழுவதும், பொதுவான நாட்டு வளர்ச்சித் திட்டங்களில் ஈடுபட்டு உழைத்தது. ஏரி வாரியம் பாசன வசதிகளைப் பெருக்கிப் பராமரித்தது. தோட்ட வாரியம் மர வளம், பயிர் வளங்களைச் செழிக்கச் செய்தது. பொன் வாரியம் நிதி நிலைகளை உருவாக்கி ஒழுங்கு செய்தது.

பஞ்ச வாரியம் வளர்ச்சிப் பகுதிகளின் மேம்பாட்டிற்கு உதவியது.

அன்றைய தேர்தல் விதிகள், சமூக ஆன்மீகப் பார்வையுடன் வரையறை செய்யப்பட்டன; அதே சமயம், அவை கடுமையாக வும் இருந்தன. முப்பத்தைந்து வயதிலிருந்து எழுபது வயதுக்கு

உட்பட்டவர்களே தேர்தலில் நிற்கலாம். இவருக்கு, 'தம் காலில் நிற்கும் அளவு' அடிப்படை நில வசதியும், திறனும் இருக்க வேண்டும்; சொந்தப் பட்டா மனையில், வில்லங்கமில்லாத வீடு இருக்க வேண்டும்; மந்திரப் பிரமாணம் தெரிந்த வல்லுநராக இருக்க வேண்டும்; ஒழுக்க சீலராகவும், கைச்சுத்தம், மனச்சுத்தம் உடையவராகவும் இருக்க வேண்டும்.

மேலும் - நேர்மையான முறைகளில் சம்பாதிப்பவராகவும், கடந்த மூன்று ஆண்டுகளில் வேறெந்த வாரியத்திலும் பதவி வகிக்காதவராகவும் இருக்க வேண்டும்.

ஓரளவு நிலம் குறைந்திருந்தால், வேதங்களும், விளக்கங்களும் அறிந்தவர்களாயிருக்க வேண்டும்.

மேற் சொன்ன அனைத்துத் தகுதிகளோடும், செயலாற்றலில் நிபுணத்துவம் பொருந்தியவரே தேர்தலில் நிற்க முற்றிலும் தகுதி பெற்றவராவார்.

இவ்விதி முறைகளில் ஓட்டை ஏதும் இருந்து - அதன் மூலம் 'தகுதியில்லாதவர்' பதவி பெற்றுவிடக் கூடாதே' என்று - 'யார் யாரெல்லாம் தேர்தலில் நிற்கலாகாது' என்றும் சட்டம் செய்திருந் தனர்.

'வாரியங்களில் ஏற்கனவே பதவி வகித்துக் கணக்குக் காட்டா தவர்கள், அவர்களின் சிற்றன்னை - பெரியன்னை மக்கள், அவர்களுடைய அத்தை, மாமன் பெற்றவர்கள், அவர்கள் தாயார் - தகப்பனாருடன் பிறந்தவர்கள், அவர்களுடைய அண்ணன் - தம்பிகள், அவர்களின் மாமனார், அவர்கள் மனைவியுடன் பிறந்த வர்கள், அவர்களின் உடன் பிறப்பான ஆண் - பெண் வர்க்க மக்கள், அவர்களுடைய மருமகன், அவர்களின் தந்தை, அவர்க ளின் மகள், ஐந்து வகையான கொடிய பாதகங்களைச் செய்தோர், பிறர் சொத்தை அபகரித்தவன், கையூட்டு வாங்கியவன், உண்ணத் தகாததை உண்போன் என இவர்கள் தேர்தலில் நிற்க அருகதையற் றவர்கள் என்று தள்ளப்பட்டனர்!

தேர்தலில் நிற்கத் தகுதியானவர்களின் பெயர்களை, ஓலை நறுக்குகளில், ஓலைக்கு ஒன்றாக எழுதி - இன்னொரு நறுக்கை அதில் திணிக்க முடியாதபடி இறுக்கிக் கட்டி - வாயோலை பூட்ட வேண்டும்.

இப்படியே, ஒவ்வொரு தொகுதிக்கும் தனித்தனியே கட்டுகள் தயாரித்து, அவற்றை ஒரு குடத்தில் இட்டுப் பாதுகாக்க வேண்டும்.

மகா சபை கூட்டி, குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை வரவழைத்துத் தேர்தலை நடத்த வேண்டும்.

முதிய வாரியர் ஒருவர், எல்லார் முன்பும் குடத்தைக் காட்டிப் பிடிப்பார். ஏதுமறியாச் சிறுவன் ஒருவன், குடத்திலிருந்து ஓர் ஓலை நறுக்குக் கட்டை எடுப்பான். அந்தக் கட்டு, இன்னொரு காலிக் குடத்துள் குலைக்கப்படும். அச் சிறுவனே மீண்டும் துழாவி, ஓர் ஓலை நறுக்கை மட்டும் எடுத்து நடுவரிடம் தருவான். நடுவர், தம் கையை அகலத் திறந்து அனைவர்க்கும் காட்டிவிட்டு, அந்த ஓலை நறுக்கை வாங்கி, அதிலுள்ள பெயரை உரக்கப் படிப்பார். பிற வாரியர்கள், அதை வாங்கி வரிசையாகப் படித்து உறுதி செய்வார்கள் - பின்னர், இப்படியே, ஒவ்வொரு கட்டிலிருந்தும் ஒவ்வொருவர் தேர்ந்தெடுக்கப்படுவார். இவ்விதம் தேர்ந்தெடுக்கப்படுபவரின் பதவிக் காலம், ஒரே ஓர் ஆண்டு வரைதான் நிலைக்கும்!

பதவிக்காலத்தை இப்படிக் கட்டுப்படுத்தியதன் மூலம், தகுதி வாய்ந்த பலருக்குப் பதவி வகிக்கும் வாய்ப்புக் கிட்டியது! இந்த அணுகு முறையில், ஒரு சிலரே பதவிகளில் நிலைத்து நின்று, செல்வாக்கைப் பெருக்கிக்கொண்டு எதேச்சாதிகாரம் செய்ய வழியில்லாமல் போயிற்று!





# உத்தரமேரூர் ஏரி

பல்லவர் ஆட்சிக் காலத்தில், தொண்டை நாட்டில் சில சமயம் பஞ்சம் ஏற்பட்டது. எனவே, அக்கால அரசர்கள் பெரிய பெரிய ஏரிகளை ஏற்படுத்தி வேளாண்மை வளத்திற்கு வழி செய்தனர்.

அப்படியான கால கட்டத்தில்தான், 'வைரமேகன் தடாகம்' என்ற பெயரில் ஒரு பெரிய ஏரி உருவாயிற்று.

முற்காலப் பல்லவன் தந்திப் போத்தரசன் கல்வெட்டில், இந்த ஏரி பற்றிய குறிப்பு இருக்கிறது. இவனுக்கு, 'வைரமேகன்' என்று இன்னொரு பெயரும் இருந்தது.

ஊருக்கு மேற்கே ஒன்றரைக் கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள இந்த ஏரி கி.பி. 755 முதல் 826 வரையிலான கால இடைவெளியில் வெட்டி வெட்டி விரிவாக்கப்பட்டது. இது, மாவட்டத்தின் இரண்டாவது பெரிய ஏரியாகும்!

சுவாமி குமார சதுர்வேதி சோமயாஜி என்பவன், முதலில் ஒரு சிறிய குளம் எடுத்தான். இக்குளமே, பிறகு கடல் போன்ற ஏரி ஆயிற்று!

கம்பவர்மன் காலத்தில், ஏரிப் பராமரிப்பு மிகவும் சிறந்திருந்தது. ஏரி வாரியத்தின் வரி வசூல் போக, ஏரியின் பராமரிப்புக்குத் தனிப்பட்டவர்களும் கூட நிலமும், பொன்னும், பொருளும் தந்து உதவினர்! இந்தப் பொது நிதியிலிருந்து கிடைக்கும் வருவாய், ஆண்டுதோறும், ஏரியை ஆழப்படுத்தவும், கரையை உயர்த்தவுமே செலவிடப்பட்டது. கம்பவர்மனின் இருபத்து ஒன்றாம் ஆட்சி ஆண்டில் செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டிலும் இந்த ஏரி குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஏரியைப் பேண, ஒரு தனி நபர் இருநூறு கழஞ்சுப் பொன் நன்கொடை தந்திருக்கிறார். அதை மூலதனமாய்க் கொண்ட ஏற்பாட்டிலிருந்து முப்பது கழஞ்சுப் பொன் வட்டி வந்தது. இதைக்கொண்டு ஏரி வாரியத்தார், வைரமேகன் தடாகத்தை ஆழப்படுத்தினார்கள்.

'வருடந்தோறும், பாசன வசதி பெருக, வழி செய்து வளம் தேடுவதில் மன்னனுடன் மக்களும் ஒருமித்து உழைத்தனர்!' என்பதற்கு இதுவே சான்று.

இந்த ஏரியை மராமத்து செய்த காலத்தில், அரசன் அருகிலேயே இருந்து வேலை வாங்கியிருக்கிறான்! நிழலுக்காகக் கீற்று வேய்ந்து, அவன் மேற்பார்வையிட்ட இடம், இன்று, 'மன்னன் குடிசை' என அழைக்கப்படுகிறது!

இந்த ஏரிக்கு, 'லோகமாதேவி' என்றும் ஒரு பெயர் வழங்கி இருக்கிறது!

அகன்று உயர்ந்த இதன் கரை நீளம், ஏழரைக் கிலோ மீட்டராகும்! வைரமேகன் தடாகத்தின் வளத்திற்கு, சேயாறு அதிகம் உதவுகிறது! இந்த ஏரியின் நீர் வரத்துக்காக, சேயாற்றிலிருந்து வெட்டப்பட்ட வாய்க்கால், 'மேல்கட்டம்மன்' என்கிற தெய்வம் பாம்பு வடிவில் வந்து வழி கோலியதாக 'அந்தநாள்' பெரியவர்கள் நம்பிக்கையுடன் பேசிக்கொள்கிறார்கள்.

உத்தரமேரூர் வைரமேகன் தடாகத்தால், பதினெட்டு ஊர்கள் பயன் பெறுகின்றன!

தேவையானால், கடல் போன்ற இந்த ஏரியை ஒரே நாளில் வடிய வைத்துவிடலாம்!

அந்நாளிலேயே, அபாயம் காக்கும் பொறியியல் நுட்பத்து டன் இந்த ஏரியை அமைத்துள்ள நம் முன்னோரின் அறிவாற்றல் போற்றுதலுக்கு உரியது!

இங்கு, நிலப்பகுதிகள், 'அபிராசன் கட்டளை', 'பராந்தகன் கட்டளை' என்பன போன்ற பெயர்களால் பிரிக்கப்பட்டிருந்தன.

இந்த ஏரியின் இயற்கை எழிலை இரசித்து மகிழ, ஆங்கில ஆட்சியாளர்கள் இங்கே ஒரு விடுதி அமைத்துக் கொண்டார்கள். உயர் அதிகாரிகள், தங்கள் குடும்பத்தாருடன் தங்கி மகிழும் ஓய்வு மாளிகையாக இது இருந்தது. அன்றைய முடி அரசின் ஓய்வு மாளிகை, இப்போது, பொதுப் பணித்துறை நிர்வாக ஆய்வு விடுதியாக மாறியுள்ளது.

பிரெஞ்சு - ஆங்கில ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட இன்றைய உத்தரமேரூர், பழம் பெருமைகளின் ஆதார விழுதுகளுடன் ஆலமரம் போலவே இருக்கிறது!

நம் நாட்டு மன்னர்கள் ஆட்சியின் சாட்சிகளாய்க் கல்வெட்டு கள் விளங்குவது போல், அன்னிய மகாராணி விக்டோரியா வின் ஆளுகைக்குச் சான்றாக 1887 ஆம் ஆண்டு கட்டப்பட்ட ஜுபிலி சத்திரம் உத்தரமேரூர் காவல் நிலையத்தருகே நிற்கிறது!

1921 ஆம் ஆண்டு நான்கு ஜெயினர்கள் மட்டுமே இருந்த சூழல் மாறி- இன்று, பலர் ஊரின் முக்கியமானவர்கள் ஆகியுள்ள னர்! அதைப்போலவே முகமதிய சகோதரர்களும், கிறிஸ்துவ சகோதரர்களும் வணிகம் மற்றும் கல்வி மேம்பாடுகளில் தங் களை ஈடுபடுத்திக் கொண்டு எல்லா இனத்தவருடனும் ஒருமித்து வாழ்கின்றனர்.

இந்த மாவட்டத்திலேயே, சர்வோதய இயக்கம் உத்தரமேரூர் ஒன்றியத்தில்தான் செல்வாக்குப் பெற்றுள்ளது!





# திருமுக்கூடல்

ஆற்றங்கரையைச் சார்ந்த ஊருக்கே ஓர் அலாதியான அழகு உண்டு. அங்கே கோபுரத்துடன் கூடிய கோயிலும் இருந்து விட்டால்?.... குலவும் எழிலைச் சொல்லவும் வேண்டுமோ!

மேலும் பல்வேறு மரங்கள் சூழ்ந்து பசுமைக் குடை பிடித்துச் சலசலக்க, பறவைகள் பண்ணிசைக்க, மூன்று ஆறுகள் முற்றாகச் சங்கமிக்க, ஓ! அந்த உன்னதத்தை என்ன சொல்ல? இப்படிப்பட்ட கவினான இடத்தைக் கற்பனை செய்தாலே, கருத்து இனிக்கிறதே! இவ்வளவு அரிய சிறப்புகளை உள்ளடக்கிய வனப்பான ஊர் ஒன்றை நாம் உண்மையிலேயே காண முடிந்தால், உள்ளம் அடைகிற உவகைக்கு எல்லைதான் ஏது? இப்படி நாம் நினைந்து நினைந்து நெசவு செய்கிற நேர்த்திகளெல்

லாம் இணைந்த ஊர் ஒன்று, உத்தரமேரூர் வட்டத்தில் என்றோ உருவாகிக் காலத்தை வென்று நிற்கிறது! அத்துடன் மட்டுமல்லாமல், பல கலை - வரலாற்றுச் செய்திகளை நாளும் சொல்லிக் கொண்டிருக்கிறது!

கண்ணுக்கு எட்டுகிற தொலைவில், ஆற்றின் மறு கரையில், செங்கல்பட்டு - காஞ்சிபுரம் சாலையில், இப்படியும் அப்படியும் பேருந்துகள் ஓடிக் கொண்டிருந்த போதிலும், நகரங்களின் தாக்கம் பரவாத இந்த இனிய ஊருக்குத் 'திருமுக்கூடல்' என்கிற திருப்பெயர் வாய்த்திருக்கிறது!

''கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளின் 'திரிவேணி சங்கமம்' எவ்வளவு சிறப்பு' வாய்ந்ததாகச் சொல்லப்படுகிறதோ, அவ்வளவு சிறப்பும் தென்னிந்தியாவின் திருமுக்கூடலுக்கு உண்டு!'' என இந்த ஊர் மக்கள் உவகையுடன் உரைக்கிறார்கள்!

தமிழகத்துத் தொண்டை நாட்டிலே, செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டத்தில் அமைந்துள்ள இந்த ஊரின் வடக்கு விளிம்பில் பாலாறும், சேயாறும், வேகவதியும் கூடிக் கலக்கிற காட்சி மிகவும் மாட்சிமையானது!

இப்படி மூவாறுகளும் ஒருங்கிணைந்து சங்கமிப்பதால், இந்த முக்கூடல், 'திருமுக்கூடல்' என்று தேசமெங்கும் போற்றப் படுகிது!

வட இந்தியத் திரிவேணி சங்கமத்தில் கங்கையும், யமுனையும் கலப்பது கண்ணுக்குத் தெரியும்; சரஸ்வதி நதி கலப்பது தெரியாது! ஆனால் - திருமுக்கூட்லில் பாலாறும், சேயாறும், வேகவதியும் ஓடி வந்து ஒன்றாவதை ஒவ்வொரு மழைக் காலத்திலும் காணலாம்!

ஒரு சில ஆராய்ச்சியாளர்கள், 'வேகவதி காஞ்சிபுரத்துடன் நின்றுவிடுகிறது. இங்கே கலப்பது கம்பா நதி!' என்று குறிப்பிடுகிறார்கள்.

தொன்மைக் காலத்திலிருந்தே, தமிழருடன் பிற மொழி பேசுவோரும் இதனை, 'தட்சண திரிவேணி' என்று போற்றி வந்திருக்கிறார்கள். வட இந்திய யாத்திரிகர் பலர், இங்கே வந்து புனித நீராடிப் போவதைப் பெரும் பேறாக நினைக்கிறார்கள்!

அடேயப்பா! எவ்வளவு பரந்து விரிந்த ஆறு! ஆனால் - கடந்த சில ஆண்டுகளாகப் பருவ மழை தவறி, இந்த அகன்ற ஆறு, பெருமளவு மணற் பரப்பையே காட்டிக் கொண்டு இருக்கிறது!

ஓர் ஓடை நதியாவது போய், இன்று ஒரு நதி ஓடை ஆகியிருக்கிறது!

என்றாலும், திருமுக்கூடலின் உன்னதம் குறைந்துவிடவில்லை! திருமுக்கூடல் என்கிற வரலாற்றுப் புகழ் நிறைந்த இந்த ஊர், வாலாஜாபாத்துக்குக் கிழக்கே, ஆறு கிலோ மீட்டர் தொலைவில், பாலாற்றின் வடகரையில், 'சுதர்சனகிரித் தொட'ரைச் சார்ந்து அமைந்துள்ளது!

இதோ, இங்கிருந்து பார்த்தால், எதிர்க் கரையில் தெரிகிறதே ஒரு மலைக் கோயில் - அது, அருள்மிகு லட்சுமிநரசிம்மசாமி ஆலயம். அந்த ஆலயம் அமைந்துள்ள மலைக்கு, 'பத்மகிரி' என்று பெயர் சொல்கிறார்கள்.

ஒரு காலத்தில், இந்தப் பத்மகிரியில், வைணவச் சான்றோர் பலர் விரும்பி வாழ்ந்த காரணத்தால் - அந்த ஊர் 'ஜீயர்புரம்' எனப்பட்டு, காலப்போக்கில் மருவி -, இன்று 'பழைய சீவரம்' என அழைக்கப்படுகிறது.

செங்கல்பட்டிலிருந்து பதினைந்து கிலோ மீட்டர் மேற்கிலும் - காஞ்சிபுரத்திலிருந்து பதினெட்டு கிலோ மீட்டர் கிழக்கிலும் எழுந்துள்ள இந்தப் பழைய சீவரத்தில் இறங்கித்தான் திருமுக்கூடலை அடைய வேண்டும். அகன்ற ஆற்றினூடே, நெடுக, ஒரு தார்ப் பாதை போடப்பட்டுள்ளது. ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கிறபோது - பேருந்துகளும், பிற வாகனங்களும் போக வாய்ப்பில்லாததால் - அக்கரைக்கும், இக்கரைக்கும் கட்டுமரங்கள் பாலம் அமைக்கின்றன.

திருமுக்கூடல் நதிக்கரையின் மடியில் - ஒரு புராதனமான 'வைணவத் தலம், வயதான மரங்களின் நடுவே வரலாற்றுக் களஞ்சியமாக விளங்குகிறது. ஊரின் வடக்கு எல்லையில் - விழுதுகள் விட்டுப் படர்ந்த ஆல மரத்தைக் கடந்து நடக்கும் போது, நமக்கு வலப்புறத்தில் நிற்கும் பெரிய அரச மரம் சலசலத்து வரவேற்கிறது. அரசின் துணைவியாக உடன் ஒரு

வேப்ப மரம்... இவற்றின் கிழக்குப் புறத்திலே, நான்கு நாகப் படிமங்கள். ஒன்றில் ஒற்றை நாகம் உயர்ந்து தலை தூக்கியுள்ளது.

அரசு - வேம்பின் வடக்குப் பக்கம், ஆற்றைப் பார்த்துக் கொண்டு, அண்மைக் காலத்தில் நிறுவப்பட்ட கங்கையம்மன் மேடை ஒன்று பூசைக்கு உரியதாய்த் துலங்குகிறது!

இங்கே - கரையோரமாகப் படித்துறையைச் சார்ந்து நிற்கும் ஆலமரம், அந்த இடத்துக்கு மேலும் அழகூட்டுகிறது! புல் பூண்டுகளை மீறிச் செழித்துள்ள நித்திய கல்யாணிச் செடிகள் கரை முழுவதும் பூத்துச் சிரிக்கின்றன.....

இடப்புறமுள்ள புழக்கமில்லாத சத்திரம் தாண்டி - வலப்புற முள்ள இலுப்பை மரங்களைக் கடந்து - கோபுரமில்லாத கோயில் மதிலுக்குள் நுழைகிறோம். சுற்றுச் சுவரின் சிமிட்டிப் பூச்சில், அண்மையில் புதுப்பிக்கப்பட்ட சேதி தெரிகிறது. மதிலுக்கு வெளியே வயதான புளிய மரங்களும், வேம்பும், கொடுக்காப்பு ளியும் அரண் செய்கின்றன.

கோயிலுக்குள் நுழைந்ததும், வலப்பக்கமுள்ள வாகன மண் டபத்தில் கருட வாகனத்துடன் - சந்திர, சூரியப் பிரபைகள் கொலுவிருக்கின்றன. புறாக்கள், இங்கும் அங்கும் பறந்து 'பேசு கின்றன'. இடப்புறம் - காவலர் தங்குமிடமும், கிணறும், ஒரு புங்க மரமும், காய்ந்த புன்னையும், சிதைந்த யாளித் தூண்களும் காணப்படுகின்றன. அங்கே ஒரு காலத்தில் தல விருட்சமாகத் தேவதாரு மரம் நின்றதாம்....

எதிரே, சிதிலமான கொடி மரமும், பலி பீடமும் விளங்க, அவற்றுக்குத் தெற்கே நான்கு கால் மண்டபம் ஒன்று நிற்கிறது. நான்கு தூண்களிலும் திருமாலின் மச்சாவதாரம், கூர்மாவதாரம், காளிங்க நர்த்தனம், அனுமன் என்று பல்வேறு ஆன்மீகச் சித்திர வேலைப்பாடுகள்... இவற்றோடு, ஒரு பெண்ணின் நடனம் கல்லிலே கலை வண்ணமாயிருக்கிறது. இவை மட்டுமல்லாமல், வாழ்வியல் உண்மைகளை உணர்த்தும் காட்சிகளும், இளைஞர்க ளுக்கான பாடங்களாக மண்டபத் தூண்களில் இடம் பெற்றுள்ளன!

மண்டபத்தின் தெற்கே, இன்னொரு மண்டபம். இந்த ஆறு கால் மண்டபத்தை, இறைவனுக்கான 'கல்யாணக் கூடம்' என்கி

றார்கள். ஆறு தூண்களிலும், திருமால், கண்ணன், கோபியர், ஆழ்வார், ராதா - ருக்மிணி, கருடன், இராமன், அனுமன், தசாவதார நிகழ்ச்சிகள் என்று ஏராளமான காட்சிகள் செதுக்கப் பட்டுள்ளன.

இந்தக் காட்சிகளிலிருந்து மீண்டு, கோயிலை வலம் வரத் தொடங்குகிறோம்... உளிக் கற்றைகளை அடுக்கிக் கட்டப்பட்ட பெரிய கோயில்... வெளிச் சுவர்களிலேயே - பலகை பலகையான கற்களில் வரலாற்றுச் செய்திகள், வரிசை வரிசையாகச் செதுக்கப் பட்டுள்ளன. அப்பன் சந்நிதியின் தென் மேற்கே - நான்கு கால் முகப்பு மண்டபத்துடன் ஆண்டாள் சந்நிதி அமைந்துள்ளது. வாயிலில் கஜலட்சுமி சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது!

மேலும் - முக்கூடல் பெருமான் கோயிலைச் சார்ந்து - மேற்கு மூலையில், இன்னொரு கோயிலும் இடம் பெற்றுள்ளது. 'கரிய மாணிக்க வரதர் சந்நிதி' என இதனைப் போற்றுகிறார்கள். இதன் வாயிலிலும் கஜலட்சுமியின் திருவுருவம் செதுக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் முகப்பு மண்டபத்தை, ஒன்பது பெரிய - அழகிய தூண்களுடன், இரண்டு உருளைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன.

நாம் ஆலய வலத்தைத் தொடர்கிறோம்... கோயிலின் கற்சன் னலுக்கு எதிரே - வட புறத்தில் இரும்புக் கதவுடன் கூடியதொரு திட்டி வாசல். ஆற்றுக்கு இறங்க - வசதியாகப் படிகள் அமைந் துள்ளன. வேம்பின் நிழல் கவிந்த படித்துறை... குளிர்ச்சியும், தூய்மையுமான தண்ணீர்... ஆடவரும், பெண்டிரும், சிறாரும் நீராட - துணி வெளுக்க... மாடுகளும், ஆடுகளும் நீர் குடிக்க... இனிய இயற்கை ஒலிகளுடன், கோயில் நிலங்களுக்குத் தண்ணீர் இறைக்கும் யந்திரங்களின் பேரோசை...

கொஞ்ச நேரம் அப்படியே நின்றுவிட்டு, திட்டி வாசல் வழியே மீண்டும் கோயில் வளாகத்துள் வருகிறோம். சுற்றுச் சுவரின் வடகிழக்கே - வாகன மண்டபத்தை ஒட்டி - அனுமனுக்கு ஒரு சிறு கோயில் எழுப்பப்பட்டுள்ளது.

நம் இந்திய அரசின் தொல்பொருள் ஆராய்ச்சித் துறை இந்தக் கோயிலைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்று - பழுதுற்ற இடங்க ளையெல்லாம் - அதன் பழமைச் சிறப்புக் கெடாமல் செப்பம் செய்து நிலை நிறுத்தி இருக்கிறது!

அருள்மிகு திருமுக்கூடல் வேங்கடேசப் பெருமான் ஆலயக் கோபுரம், அதிக உயரமில்லாதது; ஏழு சிகரங்களுடன் கூடியது. கோயிலின் தலை வாயிலில் உருளைக்கல் தூண்கள் இரண்டும், யாளித் தூண்கள் மூன்றும் நிற்கின்றன. இந்த ஆலயத்தின் கருவ றையில், மூலவரான வேங்கடேசப் பெருமாள் வடக்கு நோக்கித் தரிசனம் தருகிறார். சங்கும், சக்கரமும் தனியே நிறுவப்பட்டுள் ளன. 'இவை, தொண்டைமான் மன்னனுக்காகப் போர் புரிய வட வேங்கடத்திலிருந்து வந்தவை!' என்பது ஐதீகம்.

உற்சவ மூர்த்தியுடன் - அலமேலு மங்கைத் தாயாரும் இங்கே காட்சி தருகிறாள்.

திருமுக்கூடல் கோயிலில் குறிப்பிடத் தகுந்த சிறப்பு - கல்வெட்டு! கல்வெட்டு! கல்வெட்டுதான்! கோயிலின் வெளிப்பு றச் சுவர்களில் மட்டுமல்லாமல், உட்புறமெல்லாம் கூட கல் வெட்டுகள்தாம்!

இவற்றை, 'தமிழ் நாட்டிலேயே மிக விரிவான அளவிலான கல்வெட்டுகள்!' என்று சரித்திரச் சான்றோர் புகழ்ந்து போற்றுகி றார்கள். சோழர் ஆட்சி, ஆந்திர நாடுவரை விரிந்திருந்ததால் - இங்கே தமிழ் லிபியில் மட்டுமல்லாமல், தெலுங்கு லிபியிலும் செய்திகள் செதுக்கப்பட்டுள்ளன!

மதில் வாயிலில் நுழைந்ததும் கண்ணில் படும் - கொடி மரத்தின் அருகே உள்ள - நான்கு கால் மண்டபப் பீடத்தில் அமைந்துள்ள தெலுங்கு வரி வடிவக் கல்வெட்டுகளே நம்மை முதலில் வரவேற்கின்றன!

ஒரு காலத்தில் இந்தப் பகுதியை ஆண்டு கொண்டிருந்த தொண்டைமான் மன்னன் பற்றி, ஒரு கர்ண பரம்பரைக் கதை இங்கே வழங்கப்படுகிறது.

தொண்டைமான், திருமுக்கூடல் பெருமானிடம் அளவற்ற பக்தி கொண்டிருந்தானாம். அவனுடைய பக்தியை மெச்சிய இறைவன் அவனுக்குக் காட்சி தரவும் - மன்னன் மனம் உருகிச் சிலிர்த்தது. உணர்ச்சி வசப்பட்டு, கருவறைக்கு ஓடி, 'அப்பனே!' என இதயம் நெகிழ்ந்து மூலவரைக் கட்டித் தழுவினானாம். ஆதலால் இந்த ஆலயத்திற்கு 'அப்பன் சந்நிதி' என்கிற பெயரும் விளங்குகிறது.

காலப்போக்கில், தொண்டைமானின் பக்தி முற்றிக் கனிந்தது. மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, பற்றறுந்த நிலையில் அவன் புனித யாத்திரை மேற்கொண்டான்...

தொண்டைமான் மன்னன், திருப்பதியை நோக்கி நடந்து கொண்டிருக்கையில் - தருணம் பார்த்திருந்த பகைவர்கள், தொண்டைமான் மன்னனின் மகனான இளவரசனுடன் போர் தொடுத்தனர்.

எதிர்பாராத இந்தத் தாக்குதலால் - தொன்டைமான் மகன் திகைத்துப் போனான். அவனால் சமாளிக்க இயலவில்லை. அவநம்பிக்கையால் சோர்ந்து போகிற நிலையில், ஆலய தரிசனத்திற்குச் சென்று கொண்டிருக்கிற தந்தைக்குச் செய்தி எட்டுகிறது... மகன் தோற்குமளவு இருக்கிற மானப் பிரச்சினை வழி மறித்து மருட்டப் பார்க்கிறது.

எனினும், தொண்டைமான் தன் யாத்திரையை நிறுத்தவில்லை!

''என்ன ஆனாலும், க்ஷேத்திராடனத்திலிருந்து பின் வாங்குவதில்லை!'' என்கிற உறுதியுடன் - ஆழ்ந்த பக்தியுடன் - திருப்பதியை நோக்கி நடந்தவாறு இருந்தான்.

தொண்டைமானின் உயரிய பக்தியை உணர்ந்து உருகிய வேங்கடவன், மன்னன் புகழை நிலை நிறுத்த எண்ணி - உடனே தன் சங்கு, சக்கரங்களை எதிரிகள் மேல் ஏவிப் போர் புரியுமாறு செய்தானாம்.

இறைவனின் இணையற்ற ஆயுதங்களான சங்கும், சக்கரமும் பகைவர்களை விரட்டி, தொண்டைமான் மகனுக்கு ஆட்சியை மீட்டுத் தந்தனவாம்! பின்னர் - அந்தச் சங்கும், சக்கரமும் சிலை வடிவில் திருமுக்கூடல் கோயிலிலேயே தங்கி விட்டனவாம்!

திருமுக்கூடலில் உறையும் வேங்கடேசப் பெருமான், மும்மூர்த்தி சொரூபம் உடையவர். பிரும்மனும், திருமாலும், சிவனும் இணைந்த ஒரு முக்கூடல் மூர்த்தி இவர்!

மிருகண்டு மகரிஷி சிலை ஒன்றும் இங்கே இருக்கிறது. இந்த முனிவருக்கும், பிருகு முனிவருக்கும், பூமாதேவிக்கும், அப்பன் வேங்கடேசப் பெருமான் தரிசனம் தந்ததாகத் திருமுக்கூடலில்

இன்னொரு செவி வழிக் கதையும் சொல்கிறார்கள்.

ஆண்டுதோறும், தை மாதம் இரண்டாம் நாள் - மாட்டுப் பொங்கல் அன்று - புகழ் வாய்ந்த காஞ்சி மாநகரில் கோயில் கொண்டுள்ள வரதராஜப்பெருமாள், இங்கே உற்சவராக வருவார். அந்த மரபு இன்றளவும் தொடர்வது, இந்த ஊருக்கு மேலும் ஒரு சிறப்பைச் சேர்க்கிறது!

மாட்டுப் பொங்கல் தோறும், காஞ்சிபுரம் வரதர் சேவையு டன் பழைய சீவரம் லட்சுமிநரசிம்ம சாமியும் - சாலவாக்கம், காவந்தண்டதலம் சாமிகளும் திருமுக்கூடல் திருக்கோயிலின் உற்சவ மண்டபத்திற்கு வந்து தரிசனம் தருவது கண்கொள்ளாக் காட்சியாகும்! மாட்சிமை பொருந்திய இந்த அரிய பெரிய திருவிழாவைக் கண்டு அருள் பெற வருகிற ஏராளமான மக்கள் கூட்டம், அந்த ஆற்றங்கரைக் கிராமத்தை அதி உன்னத ஊராக்கி விடும்!

'திருமுக்கூடல் கோயிலில் செதுக்கப்பட்டுள்ள கல்வெட்டு கள், மிகவும் புகழ் வாய்ந்தவை!' என்றும், 'தமிழ் நாட்டிலேயே விரிவான அளவிலான பல அரிய தகவல்களைத் தெரிவிக்கின்றன!' என்றும், 'இந்தியத் தொல் பொருள் ஆராய்ச்சி மேதைகள் வியந்து சொல்கிறார்கள்!' என்றும் ஏற்கனவே கண்டோம்.

கடந்த நூற்றாண்டுகளின் முழுமையான வரலாறு நமக்குக் கிடைக்காத சூழலில், கோயில் சிற்பங்களும், கல்வெட்டுகளும்தாம் மின்னல் மின்னலாக அவ்வப்போது நமக்குச் சில சேதிகளைச் சொல்லி வருகின்றன. அந்த வகையில், திருமுக்கூடல் கல்வெட்டுக ளுக்கு வரலாற்றுத் துறையில் ஒரு முக்கியமான இடமுண்டு!

'கோயிலின் உள்ளும், புறமும் இடம் பெற்றுள்ள இந்தக் கல்வெட்டுகள் பதினான்காம் நூற்றாண்டைச் சேர்ந்தவை!' என வரலாற்று வல்லுநர்கள் ஆராய்ந்து அறிவித்திருக்கிறார்கள். அன்று, சோழ நாட்டை ஆண்ட வீரராஜேந்திரன் என்கிற அரசன் - இந்த ஆலயத்தையும், கல்வெட்டுகளையும் நிறுவியிருக்கிறான்.

இந்தக் கல்வெட்டுகள் மூலம், நமது பழம் பெருமைகள் தெளிவாகப் புலப்படுத்தப்பட்டுள்ளன. 'அந்நாளில், இங்கே, பல் வேறு கலைகள் கற்பிக்கப்பட்டன!' என்பதற்கு, நிறைவான சான்று கள் நிறையவே உள்ளன. இப்போது,'இலவச மதிய உணவுத்

திட்டம் யார் காலத்தில் கொண்டு வரப்பட்டது?' என அரசியல் வட்டாரங்கள் 'பட்டி மன்றங்கள்' நடத்திக் கொண்டிருக்கின்றன அல்லவா? அவற்றுக்கெல்லாம், 'திருமுக்கூடல் வீரராஜேந்திர சோழன் கல்வெட்டுகள்' மிகவும் தெளிவாக விளக்கம் அளிக்கின்றன!

இந்த மன்னனின் ஆட்சிக்காலத்தில், ஆலய வளாகத்தின் ஜனன மண்டபத்தில் அவன் ஒரு கல்விக் கூடத்தை ஏற்படுத்தி நிர்வகிக்கப் பணித்தான். மாணவர்களுக்குப் போதிய உணவும், உடைகளும், தங்கும் விடுதியும், தலை முழுக்கிற்கு எண்ணெயும், மருத்துவ வசதிகளும் கட்டணம் ஏதுமின்றி வழங்கப்பட்டன!

'ஒரு குறிப்பிட்ட இனத்தவர்களுக்கு மட்டுமே கோயில்கள் ஆதரவாயிருந்தன... சலுகைகள் தந்தன... என்கிற கருத்தைப் பொய் யாக்கும் வகையில், கோயிலுக்கென்று சோழ மன்னனால் ஒதுக்கப் பட்ட நிலக்கொடை வழி வந்த வருவாயெல்லாம், ஊரின் பலதரப் பட்ட தொழிலாளிகளுக்கும் பகிர்ந்து அளிக்கப்பட்டது.

மாடுகள் மூலம் கிடைத்த பால், தயிர், நெய் முதலியவை கோயிலுக்கும், கோயில் பணியாளர்களுக்கும் தாராளமாக வழங்கப் பட்டன.

கற்றுத் தேர்ந்த அறவோர், ஆசிரியர், மாணவர், அடியார் மட்டுமல்லாமல் - சந்தனம் அரைப்பவர், திருவீதி உலா வரும்போது குடை பிடிப்போர், நந்தவனம் அமைப்போர், பூப்பறித்து வருவோர், மாலைகள் தொடுப்போர், கோயிலைப் பெருக்கி மெழுகிச் சுத்தப்ப டுத்துவோர், கோயில் பாடகர், முரசு கொட்டுவோர், திருப்பதிகம் ஓதுவோர், கொம்பு ஊதுவோர், கோயில் மெய்க்காப்பாளர், கணக் கர், கணக்கைச் சரி பார்க்கும் தணிக்கையாளர், மண்பாண்டம் செய்வோர், ஆடை நெய்வோர், சாயமிடுவோர், அணிகலன் செய் வோர், திருமஞ்சனத்துக்கு நீர் கொண்டு வருவோர், மக்கள் நலன் கருதி நாள்தோறும் பஞ்சாங்கம் படிக்கும் நிமித்திகர், கோயில் பூசாரிகள், கொத்தனார், தச்சர், சமையல்காரர் ஆகிய எல்லா வகையி னரும் திருமுக்கூடல் கோயில் வருவாய் மூலம் பயனும் வாழ்வும் பெற்றனர். இவர்களில் மிகப்பலருக்கு, வாழ்க்கைத் தேவைகளுடன் வீட்டு வசதி கூடச் செய்து தரப்பட்டிருந்தது!

இந்தச் செய்திகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், வீரரா ஜேந்திர பெயரில் - திருமுக்கூடல் கரையில் - ஒரு மேன்மையான

மருத்துவமனை நிறுவப்பட்டிருந்தது!

ஏதோ ஆங்கிலேயர் காலத்தில்தான் கட்டுக்கோப்பான - ஒழுங்கு முறை - மருத்துவ மனைகள் தோன்றியதாக நம்மில் பலர் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், அந்நாளிலேயே, திருமுக் கூடல் கரையில் ஒரு மேன்மையான மருத்துவமனை செயல்பட்டி ருக்கிறது. அதனை, 'ஆதுலர் சாலை' என அழைத்தார்கள்!



'வழிபடுவதும், வாழ்த்துவதுமே கோயிலின் பணிகள்!' என்கிற நிலையை வீரராஜேந்திரன் மாற்றியமைத்தான். கோயில்கள், சேவை செய்ய வேண்டும்!' என அவன் கருதினான். எனவேதான், ஆதுலர் சாலை ஒன்றை அமைத்து, அதை நடத்துகிற பணியையும் கோயிலி டமே ஒப்படைத்தான்!

மேலும், மனிதர்களுக்கான மருத்துவ மனையுடன் கால் நடைகளுக்காகவும் ஒரு மருந்தகம் நிறுவி, பிராணி நலனையும் பேணினான்!

இப்படிப் பல செய்திகளைச் சொல்லும் திருமுக்கூடல் கல்வெட்டுகளைப் படிக்க, ஒரு நாள் போதாது!

'வீரராஜேந்திரன் ஆதுலர் சாலை'யில் - நாடி மருத்துவர்களுடன் அறுவை சிகிச்சை செய்வோரும், நோயாளிகளுக்கு உதவச் செவிலியரும் இருந்தனர்! இந்த மருத்துவ மனையில் பணிபுரிந்த தலைமை மருத்துவருக்குக், 'கோதண்டராம அசுவத்தாம பட்டன்' என்று பெயர். மருத்துவரும், அறுவை சிகிச்சை செய்வோரும், செவிலியரும், பரம்பரை பரம்பரையாக இந்தத் தொழில்களில் ஈடுபடுத்தப் பட்டிருந்தனர்.

இவற்றை எல்லாம் தெளிவாகச் சொல்லும் திருமுக்கூடல் கல்வெட்டுகளில், 'வீரராஜேந்திரனின் ஆதுலர் சாலையில் எத்தனை நோயாளிகளுக்குச் சிகிச்சைகள் அளிக்கப்பட்டன?' என்கிற விவரத்துடன், 'என்னென்ன மருந்துகள் தரப்பட்டன? எப்படியான உணவுகள் வழங்கப்பட்டன?' என்கிற விளக்கங்களும் உள்ளன! இவற்றுடன், 'ஆண்டு முழுவதற்கும் என்னென்ன மருந்துகள் தேவைப்பட்டன? அவற்றின் தன்மைகள் எப்படிப்பட்டவை? அவை எவ்வாறு சேகரிக்கப்பட்டன? எந்த விதமாய்ப் பாதுகாக்கப்பட்டன?' என்கிற செய்திகளின் தொகுப்பும் கூட இந்தக் கல்வெட்டுகளில் காணக்கிடக்கின்றன.

திருமுக்கூடல் ஆதுலர் சாலையில், பிணியுற்றோர் நலனுக்காகப் பதினைந்து படுக்கைகள் இருந்திருக்கின்றன! இந்த மருத்துவ மனையின் அந்தக் காலச் செலவுகள், ஆச்சரியம் தரக்கூடியவை!

தலைமை மருத்துவருக்கு, ஆண்டு தோறும் நிலக்கொடையுடன், தொண்ணூறு கலம் நெல்லும், எட்டுப் பொற்காசுகளும் ஊதியமாகத் தரப்பட்டன. அறுவை சிகிச்சை செய்பவருக்கு, முப்பது கலம் நெல்லும், இரண்டு பொற்காசுகளும் வழங்கப்பட்டன. செவிலியருக்கு முப்பது கலம் நெல்லுடன் ஒரு பொற்காசு தந்தார்கள். மூலிகைகளும், விறகும் சேகரித்து வர இருவர் நியமிக்கப் பட்டிருந்தனர். இவர்களுக்கு முறையே முப்பது கலம் நெல்லும், ஒரு பொற்காசும் கொடுக்கப்பட்டன. தம் தொழிலுடன், சிறு சிறு அறுவைகளைச் செய்து வந்த நாவிதருக்குப் பதினைந்து கலம் நெல் அளிக்கப்பட்டது. தண்ணீர் முகந்து வருபவர்களுக்குப் பதினைந்து கலம் நெல் படியளக்கப்பட்டது. நோயாளியின் உணவுக்கென்று நாள்தோறும் ஒரு நாழி அரிசி அனுமதிக்கப்பட்டது.

மேலும் - இரவு முழுவதும் விளக்குகளை எரிய விடுவோர், துணி வெளுப்போர், மருந்து மூலிகைகளைப் பாதுகாப்போர் என்று எல்லாருமே போதிய அளவு ஊதியம் பெற்றனர்.

வீரராஜேந்திரன் ஆதுலர் சாலையில், பல மருந்துகள் எப்போதும் தயார் நிலையில் இருந்தன. அவை - உத்தம சரணாதி தைலம், பாலாகேரண்ட தைலம், பஞ்சாக தைலம், லட்சணாதி ஏரண்ட தைலம், கல்யாணகம் லவணம், கண்டீர, சுக்லா சுகிரிடா, கோமூத்ரா ஹரிதஹி, தசமூலா ஹரிதணி, த்ராவட்டி, சுனேத்ரி, கல்யாணகம், விமலா, பலாடக ஹரிதாஹி, பிராமண்யம், கடும்பூரி, பில்வாதி, கரிதா, புராண க்ரிதா, வஜ்ரா கல்பம், மண்டூரக வதிகா முதலியனவாகும்.

இப்படி எவ்வளவோ விவரங்களை அள்ளித் தருகிற திருமுக்கூடல் அப்பன் வேங்கடேசப்பெருமான் ஆலயத்தை, இந்திய அரசு இதயப்பூர்வமாகப் போற்றிக் காத்து வருகிறது.

வீரராஜேந்திரன் சைவப்பற்று மிகுந்தவன். அவனுள், அப்பற்றை வேரோடச் செய்த அவனுடைய பாட்டியார் செம்பியன் மாதேவி நினைவாக இங்கே ஒரு மண்டபம் எழுப்பப்பட்டதாகவும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள். அதே சமயம், வைணவப் பற்றாளர்களை மிக மதித்து - அணுவளவு முரண்பாடும் கொள்ளாமல், இந்தத் திருமுக்கூடல் பெருமாள் கோயிலுக்கு எல்லாச் சிறப்புகளும் சேர்த்திருக்கிற பெருந்தன்மையாளன், அவன்!

'வீரராஜேந்திரன் கல்வெட்டுகளை ஒரு மன்னனின் சுய விளம்பரத் தம்பட்டம்!' என்று யாரும் புறக்கணித்துவிட முடியாது. இந்தக் கல்வெட்டுகள் மூலம், 'எவ்வளவு அறிவு பூர்வமான ஆத்மாவுடன் நாட்டை ஆண்டிருக்கிறான்!' என்பதை உணர்ந்து உணர்ந்து நாம் உவகை அடையலாம். முடி மன்னனாயினும் அவனுடைய குடியரசுக் கண்ணோட்டமும், மனிதாபிமானமும், உயிரன்புக் கொள்கையும் உன்னதமானவை!

வீரராஜேந்திரன் கல்வெட்டுகள் மூலம் - அன்றைய வாழ்க்கைநிலை, நாகரிகம், கலை, அறிவியல் சூழல் எல்லாம் துல்லியமாகப் புரிகின்றன. 'இவனுடைய ஆளுகையில் - திருமுக்கூடல், எல்லா வகையிலும் மிக நல்ல பல்கலைக்கழகமாகத் திகழ்ந்திருக்கிறது!' என்றால் மிகையல்ல.

வேதம், வானநூல், கட்டடக்கலை, மருத்துவம், பிற கலைகள் என்று அனைத்துக் கல்வி வசதிகளும் இங்கே இருந்தன. சோழ அரசர்கள், தமிழ்ப் புலவர்களை அரசு அலுவலர்களாக நியமித்து ஆதரித்த விவரம் கூட வீரராஜேந்திரன் கல்வெட்டில் இருக்கிறது. அரசர்கள் வாய்மொழி மூலம் பிறப்பித்த ஆணையை எழுத ஒரு புலவர், சரி பார்க்க மூன்று புலவர்கள், பதிவேட்டில் பதிப்பிக்க ஒரு புலவர் என 'ஒரு புலவர் குழுவே' ஆட்சிப் பொறுப்பில் இருந்தது! ஆணைகளை நிறைவேற்றும் அதிகாரிகளும் புலவர்களாகவே இருந்தனர்!

'ஒரு காலத்தில், திருமுக்கூடல், ஏராளமான சிறப்புகள் நிறைந்த நகரமாகத் துலங்கியது!' என்பதற்கு எத்தனை எத்தனையோ சான்றுகள் உள்ளன. அகழ்வாராய்ச்சியின்போது கிடைத்த சில தடயங்களும், உறை கிணறுகளும் இதன் தொன்மைச் சிறப்பை நிறையவே பேசும்!

கோயிலுள் தொடங்கும் சுரங்கம், மண்மூடி இருக்கிறதாம். அகழ்வாராய்ச்சியாளர்களுக்கும், கல்வெட்டு அறிஞர்களுக்கும் இங்கு நிறையவே வேலை இருக்கிறது.

இதுவரை நமக்குக் கிட்டியுள்ள சேதிகள் கொஞ்சமே. அவற்றிலும், கர்ணபரம்பரைக் கதைகள் கலந்து விட்டிருக்கின்றன. கட்டுக்கதைகளற்ற முழு வரலாறு கடலுள் முத்துகளாக ஆழ்ந்திருக்கின்றன. மூதறிஞர்கள் இங்கே மேலும் மேலும் முத்துக்குளிக்க வேண்டும். ஆணி முத்துகளாக அள்ளித் தர வேண்டும்!

அன்று, அரிய பல மேன்மைகளுடன் திகழ்ந்த அப்பன் சந்நிதி இன்று பழமையுற்று மௌனம் காத்து நிற்கிறது; வெறும் காட்சிப் பொருளாகத் திகழ்கிறது.

கோயிலின் முன்னே, '1904 ஆம் ஆண்டு புராதன ஞாபகச் சின்னங்களின் ரக்ஷக ஆக்டில் கண்ட நிபந்தனைகளின்படி, இந்த ஞாபகச் சின்னத்தைச் சேதப்படுத்துகிற - அல்லது விகாரப்படுத்துகிற யாதொரு நபருக்கும் 3 மாதத்திற்கு மேற்படாமல் காவல் தண்டனையாவது, 5000 ரூபாய்க்கு மேற்படாமல் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும்...' என தொல்பொருள் ஆய்வுத் துறையின் ஆணை இருக்கிறது.

இன்றைய திருமுக்கூடலில், நானூறுக்கும் மேற்பட்ட வீடு

கள் உள்ளன. தமிழுடன் தெலுங்கும் ஒலிக்கிற இந்த ஊரின் முக்கியத் தொழில்கள் : நெசவும், வேளாண்மையும்.

'தொண்டைமான் கூத்து' இங்கே நிகழ்வதுண்டு. 'திருமுக்கூடல் உற்சவம்' என்று ஒரு திருவிழா, திருப்பதியில் நடப்பது மரபாக இருக்கிறதாம்!

தொன்மைப் பெருமைகளுடன் கூடிய திருமுக்கூடலின் புகழை, இந்த ஊர்க்காரர்கள் இருவர், தங்கள் கலை இலக்கிய ஆர்வங்களால் செழிக்கச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஒருவர் : புலவர் கோ.கோவிந்தசாமி. படிக்கும்போதே கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டிகளில் பரிசுகள் பெற்றவர்; சிறுகதை உலகிற்கு அறிமுகமானவர். இந்த மாவட்டத்தைச் சார்ந்த பழம்பெரும் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் (ஜீவா) அவர்களால் ஊக்குவிக்கப்பபட்டவர். வானொலியில் தம் நாடகங்கள் மூலம் தனி முத்திரை பதித்துள்ள இவர், 'அன்பின் வெற்றி' என்ற நல்ல நாவலை தமிழுக்குத் தந்திருக்கிறார்.

இன்னொருவர் : ஆர்.கே. செல்வமணி. மிக இளம் வயதில் திரைத்துறையில் நிறைந்த புகழ் பெற்றிருக்கிற இவருடைய உழைப்பும், சிந்தனையும் பாராட்டப்பட வேண்டியவை. திரைத் துறையின் நுட்பங்களை விரைவில் கற்றுச் சிகரங்களைத் தொட்டிருப்பவர். முக்கூடல் நதிக்கரையில் அமர்ந்து அன்று செய்த கற்பனைகள், இன்று, 'புலன் விசாரனை', 'கேப்டன் பிரபாகரன்', 'செம்பருத்தி', 'குற்றப் பத்திரிகை' என்று திரை இலக்கியங்களாக மலர்ந்துள்ளன.





# மானாம்பதி

**மா** மானாம்பதிக்கு, 'வானவன் மாதேவீச்சரம்' என்றும் ஒரு பெயருண்டு. இந்த முதல் பெயர், காலப்போக்கில் மருவி, 'மானாம்பதி' ஆயிற்று.

ஆயிரம் வீடுகளுக்கு மேல் இருக்கும் மானாம்பதியின் அழகிய தெருக்களில், அன்றாடம் தறி ஒலிக்கும்; ஒவ்வொரு நாளும் ஊடும் பாவும் இழைந்து மணக்கும்.

பெரும்பாலும் செங்குந்தர் மரபினரே வாழும் இந்த ஊரில், அநேகமாக அவ்வளவு பேரும் அடிப்படைக் கல்வி பெற்றுள்ளனர்! 'பெருமளவு பட்டதாரிகள் நிறைந்த ஊர்' என்கிற பெருமையும் மானாம்பதிக்கு உண்டு!

செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டத்திலேயே, 'அதிகமான ஆசிரியர்களை வழங்கியிருப்பது மானாம்பதியே!' என்றால் மிகையல்ல! தொடக்கப் பள்ளிகளிலிருந்து பல்கலைக்கழகங்கள் வரை மானாம்பதி ஆசிரியர்கள் நாடு தழுவிப் பணியாற்றுகிறார்கள்!

இவர்களில் - பேராசிரியராகவும், கவிஞராகவும், பேச்சாளராகவும், எழுத்தாளராகவும் புகழ் பெற்றிருப்பவர் : டாக்டர் மா.செல்வராசன். இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் மொழித்துறைப் பேராசிரியர். நாடறிந்த கவிஞர். 'வைகறை மலர்கள்' இதற்குச் சான்று சொல்லும். 'பாரதிதாசன் கனல்கள்' என்னும் ஆய்வு நூல் இவருடைய சிந்தனையாற்றலின் மேன்மைகளைப் புலப்படுத்தும். 'செம்புலப்பெயல்நீர்' என்னும் தொகுப்பு நூலையும் இவர் வெளியிட்டிருக்கிறார். இளமைப் பருவத்திலிருந்து, கொள்கைப் பிடிப்புடன், தமிழ் மொழியின் உயர்வுக்கு ஓயாமல் உழைத்து வருபவர். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் படித்தபோது - அண்ணா, கலைஞர், எம்.ஜி.ஆர். ஆகிய மூவரையும் ஒரே மேடையில் ஏற்றி இலக்கிய மன்றம் கண்டவர். அக்கல்லூரியில் நெடுநாள்வரை பெயரிடப்படாமல் இருந்த விரிவுரை மன்றத்திற்குத் 'திருவள்ளுவர் மன்றம்' எனப் பெயரிட வைத்தவர். மொரீஷியசில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டில் உரத்த சிந்தனைகளைச் சொன்னவர். சென்னைப் பல்கலைக் கழக அனைத்துப் பேராசிரியர்கள் சங்கத்தின் நெடுநாள் தலைவர். முதுகலைப் பட்டம் பெற்றபோது, தமிழர் முறைப்படி வேட்டி அணிந்து வந்தவர். தனித்தமிழ்ப் பற்றாளர். தமது சொந்த 'ஆட்டோ'வின் எண் தகட்டிலுள்ள ஆங்கில எழுத்துகளையும் தமிழ்ப்படுத்தி இருப்பவர்! மும்மொழித்திட்டம் பற்றி அறிஞர் அண்ணா எடுத்த முடிவிற்குக் கருத்துரைத்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்.

நெசவு, இந்த ஊரின் உயிர் மூச்சு என்பதால், இல்லத்தில் உள்ள எல்லாருக்கும் நாள்தோறும் வேலைகள் இருக்கும்.

இங்கே நெய்யப்படும் வேட்டிகள், உறையூர் வேட்டிகள் போல் பேர் பெற்றவை. தரம் நிறைந்த இழைகளால், நேர்த்தியாகத் தயாரிக்கப்படுபவை. தமிழக அரசின் பரிசுகளைப் பலமுறை பெற்ற பெருமை மானாம்பதி வேட்டிகளுக்கு உண்டு!



இவ்வூரில், இரண்டு முக்கியமான நெசவாளர் சங்கங்கள் உள்ளன. இவை இரண்டுமே கூட்டுறவு முறையில் அமைந்தவை; நெசவாளர்களின் வாழ்க்கைத் தரம் உயரப் பாடுபடுபவை.

மானாம்பதி, இன்றளவும் புலால் மறுக்கும் ஊராகவே திகழ்கிறது! இங்கே முழுமையான சைவம் அனுசரிக்கப் படுகிறது!

செங்குந்தர் மரபினரோடு வன்னியர் முதலான மரபினரும் இங்கே கலந்து வாழ்கின்றனர். இவர்களுக்கு, விவசாயம் ஒரு துணைத் தொழிலாகவே இருக்கிறது.

இங்கே கூடும் சந்தை, செங்கை மாவட்டத்தின் குறிப்பிடத் தகுந்த பெரிய சந்தையாகும். ஆயிரக் கணக்கான மக்கள் கூடி ஊரையே கலகலக்க வைப்பார்கள். ஒவ்வொரு வியாழனன்றும் 'மானாம்பதிச் சந்தை' தவறாமல் நடக்கும்.

மாவட்டத்தின் பெரிய மாட்டுச் சந்தையாகவும் இது பெயர் பெற்றுள்ளது!

காய்கறி, நவதானியம், மளிகை, துணிமணி, இன்ன பிற பொருள்கள் என்று எதையும் இங்கே வண்டி வண்டியாக வாங்க லாம்!

இந்தச் சந்தை, கிட்டத்தட்ட ஐம்பதாயிரம் வரை ஏலம் போகிறது; இதனால், ஊராட்சிக்கு நல்ல நிதி கிடைக்கிறது.

சந்தை நடைபெறும் நாளில் மட்டும், ஐநூறு தனிக் குடும்பங்கள், தின்பண்ட வியாபாரம் செய்து அந்த வாரம் பூராவுக்குமான வருவாயைத் தேடிக் கொள்கின்றன!

மானாம்பதியில் உள்ள பஞ்சாயத்துப் பழத்தோட்டம், இருபது ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. உத்தரமேரூர்ப் பேரூராட்சியிலேயே, இதைப் போல் பயன் தரும் பெரிய தோட்டம் வேறெங்குமில்லை!

மானாம்பதியில், காலையிலும் மாலையிலும் காக்கை குருவிகளின் இரைச்சலைத் தாங்கவே முடியாது!

வேடந்தாங்கலில் தண்ணீர்ப் பறவைகள் நிறைவது போல், இங்கே தரைப் பறவைகள் ஆயிரக்கணக்கில் நிறைகின்றன. வேடந்தாங்கலில்கூட குளிர் காலத்தில் மட்டுமே பறவைகள் வந்து தங்கும். இங்கோ, ஆண்டு முழுவதும் இருந்து ஆரவாரம் செய்கின்றன!

1966 ஆம் ஆண்டு வீசிய புயலின் போது, எங்கிருந்தெல்லாமோ பயந்து வந்து தங்கிய பறவைகள் - இங்கேயே நிலைத்து, பல்கிப் பெருகிவிட்டன. இவை இரை தேடி எவ்வளவு தூரம் போனாலும் மாலையில் திரும்பிவிடுகின்றன! இவை போடும் இரைச்சலின் போது, ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ள மிகவும் சிரமப் படுவார்கள்!

உத்தரமேருருக்கு அருகே - வந்தவாசிப் பாதையில் அமைந்துள்ள இந்த ஊர், ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது.

சுந்தர சோழர் மனைவியும் முதலாம் இராஜராஜனின் தாயாருமான வானவன் மாதேவி பெயரால் ஏற்பட்ட இந்த ஊரில், 'வானவன் மாதேவீச்வரம்' என்ற திருக்கோயில் இருக்கிறது.

வானவன் மாதேவி பெயரால், நாட்டில் நிறுவப்பட்ட பல ஊர்களில் இதுவும் ஒன்று. ஆனால், இங்குள்ள கோயில், பல்லவர் காலத்தில் எழுப்பப்பட்டுச் சோழர்களால் மேம்படுத்தப்பட்டது.

'இங்குள்ள வானவசுந்தரேசுவர சாமி, இந்திராணிக்குக் காட்சி தந்தார்!' என்கிறது தல புராணம்.

மேற்கே உள்ள விஷ்ணு கோயில், பராமரிப்பு இல்லாமல் போய்விட்டது.

மானாம்பதியில் - மதிவிநாயகர், சப்பாணி விநாயகர், வில்வ விநாயகர், சூரிய விநாயகர், கீழ்த் தெரு விநாயகர் என்ற பெயர்களை உடைய கோயில்கள் உள்ளன.

மதிவிநாயகரை, 'சம்பந்தப் பிள்ளையார்' என்று குறிப்பிடுகி றார்கள். நால்வருள் ஒருவரான சம்பந்தரால் பாடப்பட்டதால், மதி விநாயகர், 'சம்பந்தப் பிள்ளையாராக' மாறினார்.

வடதிசையிலுள்ள சோழியம்மன் ஆலயம், மானாம்பதியின் முக்கியத்தலமாகும். இவ்வாலயத்தில், உத்தரமேரூரின் சுற்றுப்பு றத்தைச் சார்ந்த ஏழு கிராமங்களின் (இளநகர் - எட்டியம்மன், தண்டரை - குந்தியம்மன், விசூர் - வீரியம்மன், நெடுங்கல் - செல்லியம்மன், பெருநகர் - எல்லையம்மன், மேற்காவல் - வராகி, கீழ்க்காவல் - கௌரி) தேவதைகளும் கூட இடம் பெற்றுள்ளன!

இங்குள்ள வராகி, இந்தப் பகுதியில் வேறெங்கும் இல்லாத தெய்வமாகும்!

தன் தலையைத் தானே வெட்டிக் காணிக்கைத் தருகிற மாதிரி, இந்த ஊரில் ஒரு சிலை இருக்கிறது!

பெரிய நாயகி சமேதரான வானசுந்தரேசுவரர் கோயில், பல்லவர் காலத்துக்கு உரியது என்பதற்கு, இங்குள்ள இராஜ சிம்மத் தூண்கள் அடையாளங்களாக உள்ளன. எனினும், கருத்தை ஈர்க்கும் சிற்பங்கள் யாவும் சோழர் பாணியிலே அமைந் துள்ளன. ஆனால், இங்கே சோழர் காலக் கல்வெட்டு ஏதும் கிடையாது!

இக்கோயில் பழமையுற்று இடிபாடு அடையவும், பின்னா ளில் வந்த விஜயநகர அரசர்கள் இதைப் புதுப்பித்து நிலக்கொடை வழங்கி,சுவரில் தங்கள் சாசனங்களை மட்டும் வெட்டி விட்டார் கள்!

அக்கால மக்களால் தரப்பட்ட தறிவரி கோயிலுக்கே பயன் பட்டது. இங்கே, ஐந்து நந்தா விளக்குகள் எப்போதும் எரிந்தன.

சோழ மன்னர் காலத்தில் மகாபாரதத்தைப் பல ஊர்களிலும் பரப்பும் முயற்சி தீவிரமாக இருந்தது. இதற்காகப் 'பாரத விருத்தி' என்ற பெயரில் நிலம் ஒதுக்கப்பட்டது.

மானாம்பதியில் இப்போதும் கூட பாரதம் படிக்கும் பெரு விழா மிகச் சிறந்த முறையில் நடத்தப்படுகிறது.

இசைக் கதை சொல்வோரில் வல்லவரை அழைத்து, பதினைந்து நாட்கள் பாரதம் சொல்ல வைப்பார்கள். ஒரு நாள் சொற்பொழிவு என்றால், ஒரு நாள் கூத்து நடைபெறும். இந்தக் கூத்தின் உச்சக் கட்டம் : 'அர்ச்சுனன் தபசு'.

நூறு அடி உயரப் பனை மரத்தை நட்டு, நூலேணி மூலம் அதில் ஏறி, அர்ச்சுனன் உச்சிக்குப் போக வேண்டும்! இப்படிப் போகும்போது, ஒவ்வொரு படிக்கும் ஒரு பாட்டுப் பாடுவான்! இதைக் காண, ஏராளமான மக்கள் கூடுவார்கள். இந்த நூலேணி நிகழ்ச்சி - சுற்றுப் புறத்தில் வேறெங்கும் நடப்பதில்லை!



இந்த உயரமான பனை மரத்தைத் தேடித் தேர்ந்தெடுப்பதில் ஊரே ஆர்வம் காட்டும். மரங்களை வெட்டி - இணை வண்டிகளில் ஏற்றி வருவதே ஓர் உற்சவம் போல் இருக்கும்! சிறுவரும் பெரியோருமாக - இருநூறு இருநூற்றைம்பது பேர் - மேள தாளத்துடன் அந்தப் பனை மரத்தைக் கொண்டு வருவார்கள்!

பாரதக் கூத்து முடிகிற சமயம், எண்பது அடி நீளத்தில், பொருத்தமற்ற அகல உயரங்களில், 'துரியோதனன் கொடும் பாவி' செய்து, அதைக் கேவலப்படுத்திக் குலைப்பது இங்கே மரபாக இருக்கிறது!

## தைப்பூசத் திருவிழா

மானாம்பதியில் நிகழும் திருவிழாக்களில், தைப்பூசத் திருவிழா குறிப்பிடத் தக்கது; இந்த விழாவிற்கு, ஐநூறு வருடப் பாரம்பரியம் உண்டு.

சேயாற்றங்கரையில் அமைந்துள்ள உக்கல், பெருநகர், மானாம்பதி ஆகிய ஊர்களைச் சார்ந்தோரால் இந்த விழா ஆண்டு தோறும் சிறப்பாய்க் கொண்டாடப் படுகிறது.

மானாம்பதிச் சாமியுடன் - மானாம்பதியைச் சுற்றியுள்ள பதினெட்டுக் கிராமங்களில் இருந்தும், ரிஷப வாகனங்களில் இறைவன் திருவுருவங்கள் வந்து தரிசனம் தரும்! சேயாற்றில், முழுநிலா நாளில், எல்லா உற்சவமூர்த்திகளும் வரிசையாய்க் காட்சி தர, ஒரே சமயத்தில் சபா தாம்பூலம் வாங்கப்படும். இவ்வூர் மக்கள், ''ஜகஜ்ஜோதியான இந்த தீபாராதனைகளைக் காண, கண்கோடி வேண்டும்!'' என வர்ணிக்கிறார்கள்.

இந்த ஆற்றுத் திருவிழா, இரவு முழுவதும் நடக்கும்! மறு நாள் காலை, அனைவரும், உற்சவ மூர்த்தியுடன் அவரவர் ஊர்களுக்குப் போய்ச் சேர்வார்கள். இத்தகைய காட்சியை, தமிழ கத்தின் பிற பகுதிகளில் காண்பது அரிது!

## மாசிமகத் திருவிழா

மானாம்பதியில், மாசிமகம் திருவிழாவும் சிறப்பாக நடைபெறும். மாசி மகத்தன்று இரவு, வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் 'மானாம்பதி சந்திப்புச்சாலையில்', ஒன் பது ஊர்களிலிருந்து சாமிகள் வந்து தரிசனம் தரும்.

இந்தச் சாலையை, 'காசி - இராமேஸ்வரம் சாலை' என்றும் சொல்கிறார்கள். அந்நாளில், இதுவே முதன்மையான நெடுஞ்சா லையாக இருந்திருக்கிறது. இதற்குச் சான்றாக, வழி நெடுகிலும் பழங்கால ஒய்வு மண்டபங்களும், குளங்களும் அமைந்துள்ளன.

இந்த மாசி மகத் திருவிழாவிற்கும் ஐநூறு வருடச் சிறப்பு உண்டு. விசூர், பெருநகர், மானாம்பதி மக்களால் இந்த விழா நிகழ்கிறது. ஒன்பது சாமிகளும் காளை வாகனங்களில் ஓரணியாக நிற்க, தீபாராதனை நிகழும். அடுத்த நாள் காலையிலேயே, ஆண்டவன் திருவுருவங்கள் எல்லாம் அந்தந்த ஊர்களுக்குத் திரும்பும். உத்தரமேரூர் வட்டத்தின் சிறப்பு வாய்ந்த விழாக்

களில், இது ஒரு முக்கியமான விழாவாகும்.

'தைப்பூசம், மாசி மகம் ஆகிய இவ்விரு விழாக்களுமே, மக்களிடையே சமய ஒருமைப்பாட்டையும், கூட்டுறவு மனப் பான்மையையும் வளர்க்கும் விதத்தில் அமைக்கப்பட்ட விழாக் கள்!' என ஊர் மக்கள் பெருமிதப்படுகிறார்கள்.

## பங்குனி உத்திரப் பெருவிழா

ஒவ்வோர் ஆண்டும், பங்குனித் திங்கள் முழு நிலா நாளில், வானசுந்தரேசுவரருக்கும், பெரியநாயகிக்கும் நடை பெறும் திருமணமே பங்குனி உத்திரப் பெருவிழாவாக நிகழ்கி றது.

இங்கே, இந்த முப்பெரும் திருவிழாக்களுடன் வேறு சில உற்சவங்களும் நிகழ்வதால், அண்டை அயலார் அடிக்கடி சந்திக் கும் வாய்ப்புகளைப் பெற்று அகம் மகிழ்கிறார்கள்.

காணும் பொங்கல் அன்று - சிறுமியர், இளம் பெண்கள், தாய்மாரெல்லாம் சந்தைத் தோப்பில் ஒன்று கூடி - பேதம் இல்லாமல் விளையாடி மகிழ்வது என்பது இந்த ஊரின் சிறப் பான நடைமுறை!

மானாம்பதியில் கோயில் கொண்டுள்ள இறைவன் பேரில், திருக்கழுக்குன்றம் இன்னிசைக்கவி வே.நடேச முதலியார், 'ஸ்ரீ வானசுந்தரேசுவரர் திருப்பதிகம்' என்கிற நூலை இயற்றியுள்ளார்.

அண்மையில் நடந்த குடமுழுக்காட்டு விழாவின் போது புலவர் நடேச நாராயணன், இந்த நூலுக்குத் தெளிவுரை எழுதி மீண்டும் அச்சேற்றி இருக்கிறார்.

குசல. மா.சுப்பராய முதலியார் என்பவரால், 'ஸ்ரீ சோழியம் மன் நாமாவளி வாழ்த்துப்பா' என்னும் சிறு புத்தகம் ஒன்றும் வெளியிடப்பட்டுள்ளது.

நீல.கார்த்திகேயன், ஆ.முத்துசாமி முதலியார், வி.அருண கிரி போன்றோரின் கூட்டுறவில் - மானாம்பதி மக்கள் கட்சி பேதமில்லாமல் செயல்பட்டு ஊருக்குப் பல நன்மைகளை உரு வாக்கி வருகிறார்கள்!





# மானாம்பதி கண்டிகை

சுமார் முன்னூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஆந்திர மாநிலத்தின் கர்நூல், கடப்பா, சித்தோட்டம், பர்ணபல்லி முதலிய இடங்களிலிருந்து ஏராளமான மக்கள் தமிழ் நாட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

பஞ்சம் பிழைக்க வந்த இவர்கள், நாயுடு வகுப்பைச் சேர்ந்தவர்கள்; ஆனாலும், கத்தோலிக்கக் கிறிஸ்துவ மதத்தைத் தழுவி இருந்தனர்.

முதன் முதலில் இந்த மரபினர் உத்தரமேரூருக்கும், திருப்புலிவனத்துக்கும் இடையே உள்ள 'கருவேப்பம்பூண்டி'யில் காலூன்றினர். பின்னர், கூட்டம் கூட்டமாய்ப் பிரிந்து, அங்கங்கே குடியிருப்புகளை அமைத்துக் கொண்டனர். இப்படி ஒவ்வோர் ஊரின் அருகேயும் அமைந்த புதிய கிராமம், 'கண்டிகை' எனப் பட்டது. இந்த வகையில், மானாம்பதிக்கு அருகே உருவான ஊர் 'மானாம்பதி கண்டிகை' என வழங்கலாயிற்று.

ஆர்ச்பிஷப் அருளப்பாவின் பிறந்த மண்: மானாம்பதி கண்டிகையே.

இங்கு ஒரு தொடக்கப் பள்ளி நூற்றாண்டு விழாவை எதிர் நோக்கிக் காத்திருக்கிறது.

மூவாயிரம் பேர் வாழும் இந்த ஊரில், எல்லாருமே தெலுங்குதான் பேசுகிறார்கள்! அனைவரும் மண்ணையும் விண்ணையும் நம்பி இருப்பவர்கள்! விவசாயத்தில், இவர்கள் விளைவிக்காத பொருள்களே இல்லை! கடுமையான உழைப்பாளிகள்; ஆண்களுக்கு நிகராகப் பெண்களும் பாடுபடுகிறார்கள்!

மானாம்பதி கண்டிகைக்குப் பக்கத்தில் இருக்கிற ராவத்த நல்லூர்க் கண்டிகையின் வரலாறும் இத்தகையதே. ஆனால், அதைவிட இது கொஞ்சம் சின்ன ஊர். இந்த ஊரில், இரண்டாயிரம் பேர் வாழ்கிறார்கள்.

ராவத்தநல்லூர்க் கண்டிகைக்கரர்களும் - கறிகாய், மிளகாய், பயறு வகைகளைப் பெருமளவு விளைவிக்கிறார்கள். ஒவ்வொரு நாளும், உத்தரமேரூரில் கடைகள் போட்டு விற்றுவிடுகிறார்கள்!

விவசாய வேலைகள் இல்லாத நாள்களில், கிணற்று வேலைக்குச் செல்கிறார்கள்; அல்லது மர அறுப்புப் பணிகளில் ஈடுபடுகிறார்கள்.

மானாம்பதி கண்டிகையில், ஒவ்வோராண்டும், பிப்ரவரி இரண்டாம் தேதி ஒரு பெரிய உற்சவம் நடைபெறும். இங்குள்ள காணிக்கைமாதா கோயில் கோலாகலம் பூண்டுவிடும். இந்துக்கள் திருவிழா மாதிரி, ஏழு தேர்களில் - காணிக்கை மாதா சூசையப்பர், புனித அந்தோணியார் முதலிய தேவ தூதர்களின் திருவுருவச் சிலைகளை இருத்தி இரவு உலா நிகழ்த்துவார்கள்.

மதப் பாகுபாடு இல்லாமல், அக்கம் பக்கமுள்ள இந்துக்களும் இந்த விழாவில் கலந்து கொள்வார்கள்.

ராவத்தநல்லூரிலும் ஒரு பழைமையான ஆலயம் இருக்கிறது. இங்குள்ள அமலோர்ப்பலமாதா கோயிலில் கூட, ஆண்டு தவறாமல் ஆடம்பரமான திருவிழா நடக்கும். ஐந்து தேர்களில் தேவதூதர்களை ஏற்றிப் போற்றுவது இவர்கள் மரபு!

ராவத்தநல்லூரை, 'இலவுகாத்த நல்லூர்' என்றும் சொல்கி றார்கள்.

மானாம்பதி கண்டிகை, ராவத்தநல்லூர்க் கண்டிகைகளில் 'கோல்னா விளையாட்டு' என்று ஒரு கிராமியக் கலை விளை யாட்டு நிகழ்கிறது.

''கோலுக் கோலின்னாரே, கோலின்னக் கோலின்னாரே'' என்று தொடங்கி, பக்திப் பாடல்களையும், வாழ்வியல் பாடல்க ளையும் தெலுங்கில் பாடியபடி - ஒரு விதத் தாளம் போட்டு ஆடுவார்கள். மறைந்து வரும் இக்கலை, இப்போது இங்கு மட்டுமே உயிர் வாழ்கிறது.





# பெருநகர்

கச்சியப்பரின் காஞ்சிபுராணம், பெருநகரைப் 'பிரம நகர்' என்று போற்றுகிறது.

திருவாவடுதுறையைச் சார்ந்த சிவஞான யோகிகளின் தலைமை மாணவரான இவருக்குக் 'கொடைப் புலவர்', 'கவி ராட்சசர்' என்றெல்லாம் பட்டங்கள் உள்ளன.

'இருபத்தெண்டளீகப் படலம்' என்ற பகுதியிலே, பல்வேறு தலங்கள் பற்றியும் இவர் பரந்த கண்ணோட்டத்துடன் பாடி இருக்கிறார்.

கச்சியப்ப முனிவரின் 'பிரம்மீசர் பதிற்றுப்பத்தந்தாதி' - காஞ்சிபுரத்திற்கு இருபத்தியொரு கிலோமீட்டர் தொலைவில்,

சேயாற்றின் தென் புறத்தில், வந்தவாசிச் சாலையில் (காசி - இராமேஸ்வரம் பாட்டையில்) அமைந்துள்ள பெருநகரை, 'காஞ்சிமாநகரின் தெற்கு எல்லை' என வர்ணிக்கிறது.

ஒரு காலத்தில், இப்போது செய்யாறு வட்டத்தில் உள்ள உக்கலுடன் இந்த ஊர் இணைந்திருந்ததால், 'உக்கலாகிய பெருநகர்' என அழைக்கப்பட்டது.

தொண்டை நாட்டின் உட்பிரிவுகளாகிய புலியூர்க்கோட்டம், வெண்குன்றக்கோட்டம் முதலிய இருபத்து நான்கு கோட்டங்களில் வெண்குன்றக் கோட்டத்தைச் சேர்ந்ததும், பெருநகர் நாடு பெரு நகர் நத்தம் என்றெல்லாம் சிறப்புப் பெயர்களைப் பெற்றதுமான இந்த ஊரில், கொள்கைச் சான்றோர் பலர் வாழ்ந்துள்ளனர்.

'நான்முகனான பிரம்மன், ஒரு சமயம் வேதம் ஓதும் அதிகாரம் இழந்து போனான். விமோசனத்திற்காக இங்கே வந்து, சேயாற்றில் நீராடி வழிபட, ஈசன், தானும் நான்கு முகங்களுடன் தோன்றி அருள் பாலித்தான்' என்பது தல வரலாறு.

இந்தக் காரணம் கருதியே, இங்குள்ள இறைவனைப் 'பிரம்மீசர்' என்று போற்றுகிறார்கள்.

ஈசன் நான்கு திருமுகங்களோடு தோன்றியதால், 'சதுரானன சங்கரம்' என இன்னொரு பெயரையும் இவ்வூர் பெற்றிருந்தது. இங்குள்ள இறைவியின் பெயர்: பட்டு வதனாம்பிகை. தலவிருட்சம் வன்னி மரம்.

பெருநகர்க்கோயிலை, கோச்செங்கோட் சோழன் என்பவன் கட்டினானாம்.

'இங்குள்ள கல்வெட்டுகளில் மிகுதியானவை, விஜயநகர மன்னர்களுக்கு உரிமையானவை!' என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் மூன்றாம் குலோத்துங்கன், வீரபாண்டியன், குலசேகரன் காலத்துச் சாசனங்களும் இங்கே காணப்படுகின்றன!

இவர்கள் காலத்தில், கோயில் நிர்வாகம் செம்மையாகத் துலங்கியது. கோயிலைச் செப்பனிடுதல், ஆராதனை, வேத பாராயணம், உற்சவம் போன்றவை ஒழுங்காக நடந்தன. 'சம்புவராயன்' என்ற தலைவன் இதைக் கவனித்து வந்ததாகக் கல்வெட்டு சொல்கிறது. நெசவாளர்களிடம் வாங்கும் வரிப்பணமும், இந்தக்

கோயில் நிர்வாகத்திற்கு நிதியாக வழங்கப்பட்டிருக்கிறது.

தெலுங்குச் சோழர்கள் காலத்தில் நடந்த விமரிசையான விழா, எக்காரணத்தாலோ நின்றுவிட்டிருந்தது. இதைக் கல்வெட்டுகள் மூலம் கண்டு தெளிந்த 'ஆளப்பிறந்தான்' என்னும் சேனைத் தலைவன், அந்த விழா மீண்டும் நடைபெற ஆணையிட்டிருக்கிறான்.

பின்னர், விஜயநகர மன்னர் ஆட்சியில், இக்கோயில் விரிவாக்கப்பட்டது. கிருஷ்ண தேவராயர் காலத்தில், வைகாசி விழா ஆறு நாட்கள் நடந்தது. மன்னரே இதை முன்னின்று நடத்தினார்.

இவ்வூரின் தரிசு நிலம் நெசவாளர்களுக்கு உரியதாகி, அதன் விளைச்சல் கோயிலுக்கே தரப்பட்டது.

பிரம்மபுரீஸ்வரர் ஆலயம், ஐந்து ஏக்கர் பரப்பளவில், ஐந்து நிலைகளை உடைய தெற்குப் புறக் கோபுரம் அழகோடு அமைந்துள்ளது. அடுத்த கோபுரம், மூன்று நிலைகளோடு கிழக்கு நோக்கி இருக்கிறது.

நிழல் பரப்பும் மரங்களும், குளமும், அலங்கார மண்டபமும், விநாயகர் சந்நிதியுமாக இக்கோயில் மூன்று பிராகாரங்களைக் கொண்டுள்ளது. சோழர்காலச் சிற்ப எழிலோடு, விஜயநகர மன்னர்களின் கலை வேட்கையும் இங்கு இணைந்து விளையாடுகின்றன.

ஒரு தூணில் விநாயகரின் பல நிலைகள் செதுக்கப்பட்டு, 'கணபதி ஸ்தம்பம்' என வழங்கப்படுகிறது.

உள் பிராகாரத்தின் தென் கிழக்கு மூலையில் - ஆந்தை முகமும், மனித உடலுமாகத் தண்டாயுதம் ஏந்திய சிலை ஒன்று நிற்கிறது! இது பற்றிய விவரம் ஏதும் தெரியவில்லை! இன்னொரு வியப்பான விஷயம், மூதேவிக்குக் கூட இங்கே சிலை இருக்கிறது!

மற்றபடி, சிவன் கோயிலுக்கே உரிய எல்லாத் திருவுருவங்களும் இங்கே உள்ளன. இக்கோயிலிலும், தைப்பூசத் திருவிழா சிறப்பாக நடைபெறும். அன்று, சேயாற்றில் காட்சி தரும் பதினெட்டு ஊர்ச் சாமிகளில், இவ்வூர்ச் சாமியும் ஒன்று.

இங்கு நடைபெறும் மாசி மகத் திருவிழாவும் குறிப்பிடத் தக்கதே.

படிக்காசுப் புலவரின் 'தொண்டைமண்டலச்'சதகத்தையும், கச்சியப்ப முனிவரின் 'பிரம்மீசர் பதிற்றுப்பத்தந்தாதி'யையும் - பெருநகரைச் சேர்ந்த அகஸ்தியப்ப முதலியார் என்பவர் நூறு ஆண்டுகளுக்கும் முன்னால் அச்சிட்டு உதவினார்.

பின்னர், 1936 ஆம் ஆண்டில் வி.பி. அழகேச முதலியார் என்னும் தமிழறிஞர் - பின்னாளின் 'சிவஒலி' ஞானானந்த அடிகளார் - காஞ்சிபுரம் வித்வான் ஆ.நமசிவாய முதலியார் என்பவரைக் கொண்டு, அரும்பதவுரையுடன் வெளியிட்டார்.

பிரம்மீசர் பதிற்றுப் பத்தந்தாதியை, எல்லோரும் படித்துப் பயன் பெற வேண்டி, இன்றைய அகஸ்தியப்ப முதலியார், அதை மேலும் எளிமைப்படுத்திப் பதிப்பித்தார். இந்தப் பணி சிறக்க இவருக்கு உதவியவர், சித்தாந்தக் கலைமாமணி மகாவித்வான் சி.அருணைவடிவேல் முதலியாராவார். இந்நூல் மூலம், இறைவன் பெருமையுடன் ஊர் வளமும், தமிழ் நயமும் புலனாகின்றன.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட - அகஸ்தியப்ப முதலியாரின் தந்தையார் - பிச்சையப்ப முதலியார், தரும சிந்தையும், தமிழ் உணர்வும் நிரம்பியவர். புலவர்களை எதிர்கொண்டு வணங்கி, அவர்களுக்கு வேண்டுவன செய்வதைப் பெரும் பேறாக நினைப்பவர். 'அபிதான சிந்தாமணி' என்னும் நூலில் இவரைப் பற்றி ஒரு செய்தி வருகிறது.

பிச்சையப்ப முதலியார், தம்மைத் தேடி வந்த புலவர் ஒருவரின் பல்லக்கை, எதிரே ஓடிச் சுமந்து உபசரித்தாராம்! அவருக்குப் பிடித்த கறி எதுவென அறிய முயன்றபோது, ''ஆயரக் கறி சமைத்துப் படை!'' என அந்தப் புலவர் சொன்னார். ஒரு கணம் யோசித்த வள்ளல் பிச்சையப்பர், மகிழ்ச்சியுடன் இணங்கினார்.

முதலியாரும், அவர் மனைவியும் சுவையாய்க் கீரை சமைத்துப் புலவருக்கு விருந்து படைத்தனர்!

ஆய்ந்து எடுத்துச் சமைக்கப்படும் கறி என்பதால், கீரை, 'ஆயரக்கறி' ஆயிற்று. இதை, 'ஆயிரக்கறி' என நினைத்து அரண்டு போகாமல், தாம் வேண்டியதை உய்த்துணர்ந்த பிச்சையப்பரின் மதி நுட்பம் கண்டு மகிழ்ந்த புலவர், இவர்கள் மேல் ஒரு சதகம் பாடினார்.





அறிஞர்களை மதித்துப் போற்றும் மரபு, இன்றும் இந்த ஊரில் நிலைத்து நிற்கிறது.

இங்கே ஒரு பெரிய பெருமாள் கோயிலும் இருக்கிறது. வரதராஜப்பெருமாள் பெருந்தேவியுடன் காட்சி தருகிறார். இக் கோயில், பழைமையுற்று, கவனிப்புக் குறைந்து காணப்படுகிறது.

பெருநகர் வாசிகளின் முக்கியத் தொழில் விவசாயமே. நூறுக்கும் மேற்பட்ட நெசவாளர் குடும்பங்களும் இங்கே உள் ளன.

நீண்ட காலத்திற்கு முன் சேயாற்றின் தென் கரையிலேயே பெருநகர் இருந்திருக்கிறது. தொங்கிபுரம், மடவளாகம் முதலிய ஏழு உட்பிரிவுகளுடன் விளங்கிய பெருநகர், காலப்போக்கில் இன்றுள்ள நிலையை அடைந்துவிட்டது.

அதே சமயம், இப்போது, வீரக் குடியினர் சதுக்க எல்லைக்

கல்லிலிருந்து - சிங்களா வீதி தென் முனையில் விளங்கும் பனையடி விநாயகர்கோயில் கீழ்த்திசைவரை - 'மடவளாகம்' என வழங்கப்படுகிறது. மேற் பகுதியைப் 'பெருநகர்' என்கிறார் கள்.

'மேல் வீதியின் தென் மூலையில் இந்திரன் கோயிலும், செஞ்சான் வீதி மேற்கு மூலையில் சமணர் கோயிலும் இருந்த ன...' என்பதற்கான அடையாளங்கள் இங்கே உள்ளன. பெருநக ரில் சமணரோடு, பௌத்த மதத்தினரும் வாழ்ந்திருக்கின்றனர்!

பெருநகரில் வடக்கே, காளி கோயில்; தெற்கே, சப்தமாதாக் கள் கோயில்; கிழக்கே, ஐயனார் கோயில்; ஊர் நடுவே, மாரியம் மன் கோயில்; கற்பக விநாயகர், பனையடி விநாயகர், மழு பொத்த விநாயகர் என்று ஆறு விநாயகர் கோயில்கள் உள்ளன. இவை யாவும் ஊருக்குத் தனியழகு தருகின்றன.

பிரம்மீசர் கோயில் நிர்வாகம், தொண்டை மண்டலச் சைவ வேளாளர்களிடமே இன்றளவும் இருக்கிறது. இக்கோயில், நெடுங்காலமாக இவர்கள் நிர்வாகத்தின் கீழ் இருப்பதற்கான தடயங்களாக, இங்கே பொறிக்கப் பட்டுள்ள கலப்பைச் சின்னங் களை மேற்கோள் காட்டுகிறார்கள்.

'நெற்குன்றமெங்கும் நிலை பெற்று மல்கும் பிரமாபுரம்' என்ற கச்சியப்பர் வாக்குப்படி, சேயாற்றாலும், ஏரி நீராலும் கிராம வளம் நிறைகிறது.

இங்குள்ளவர்களின் குடி தண்ணீர்த் தேவையை, அண்மைக் காலம் வரை 'பூமாலை செட்டிகுளம்' பூர்த்தி செய்தது. இப் போது, சேயாற்றுத் தண்ணீர், மேனிலைத் தொட்டி மூலம் ஊர்த் தெருக்களுக்கே வந்துவிட்டது!

காஞ்சி நகரம், தென் திசையில் பெருநகர் வரை பரவி இருந்தது, இருக்கிறது என்றும் சொல்லலாம். இந்தத் தாக்கத்தால் தான், அறுபத்து மூவர் உற்சவத்திலிருந்து அனைத்து உற்சவங்க ளும் இங்கே காஞ்சி விழாக்கள் போலவே நிகழ்கின்றன!

பெருநகருக்குள் சாவு நேர்ந்தால் - சடலம் நெடுஞ்சாலைக் குக் கொண்டுபோகும்வரை மட்டுமே அமங்கலப் பறை ஒலி எழுப்பப்படும். நெடுஞ்சாலையில் அடி பதித்ததும், அமங்கல மேளம் மங்கல மேளமாக மாற்றி அடிக்கப்படும்!

ஒரு காலத்தில், இந்த நெடுஞ்சாலை, 'காசி - இராமேஸ்வரம் சாலை' என வழங்கப்பட்டதால் இந்த மரியாதை தருகிறார்களாம்!

'வில்லியர்' என்கிற காட்டுக்காரர்களைச் செங்கை மாவட்டம் முழுவதும் காணலாம்! ஆனால், கிராமத்திற்கு ஓரிரு குடும்பங்கள் என்கிற விகிதத்தில்தான் இவர்கள் இருப்பார்கள்! என்றாலும், பெருநகரில் முப்பது குடும்பங்களுக்கும் மேல் உள்ளன! இவர்களை, 'இருளர்கள்' என்றும் குறிப்பிடுவதுண்டு...

ஆதிவாசிகளின் தன்மை படிந்த இவர்களின் குடிசைகள் குகைகள் போல் இருக்கும். இவர்களின் இருப்பிட வாசலில், குழந்தைகளே குனிந்துதான் செல்ல வேண்டும்! பெரியவர்கள், மண்டியிட்டுத் தவழ்ந்துதான் உள்ளே செல்ல இயலும்!

இவர்களை, 'நாடோடிகள்' என்று சொல்ல முடியாது; அதே சமயம், ஒரே இடத்தில் நிலைத்திருந்தாலும், பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்புவதில் ஆர்வம் காட்டுவதில்லை!

கடுமையாக உழைக்க முடிந்தவர்கள்; ஆனால், நிரந்தரப் பணிகளில் ஈடுபட மாட்டார்கள்! சோம்பல் நிறைந்த ஓய்வும், உல்லாச அலைச்சலும் இவர்களுக்கு மிகவும் பிடித்தமான விஷயங்கள்! அநேகமாக, அரிசி ஆலைகளில் ஓரளவு ஓட்டி வேலை செய்வார்கள். மற்றபடி அதிகமாக வேறு கூலி வேலைகளுக்குப் போக மாட்டார்கள்!

விளைச்சல் காலங்களில் வயல் வரப்புகளில் உள்ள வளைகளைத் தோண்டி, எலிகள் திருடிய தானியங்களைத் திரட்டிப் பிழைப்பார்கள்; எலிகளையும் பிடித்துப் புசிப்பார்கள்.

காட்டுக் காய்களையும், கனிகளையும், கிழங்குகளையும் கொண்டு வந்து சாப்பிட்டு வாழ்வார்கள். கோடையில், பூமிக்குள் எறும்புகள் சேகரித்து வைத்த புல் விதைகளை அகழ்ந்தெடுத்து அரிசியாக்கிச் சமைத்துக் கொள்வார்கள்!

பருவ மாறுதல்களுக்கு ஏற்ப - கிடைக்கிற தேன், ஈசல், ஈச்சம்பழம், பாலைப்பழம், காட்டுவள்ளி, காட்டுக்கருணை, முயல், பாம்புத்தோல் முதலியவற்றை விற்பனை செய்வார்கள். எப்போதும் விறகு பிளந்து விலை கூறுவார்கள்...

'கன்னியம்மன்' எனப்படும் இவர்களின் குல தெய்வத்திற்கு,

இளவேனில் காலத்தில் விழா எடுப்பார்கள். ஆங்காங்கே பரவி யுள்ள உறவு நட்பெல்லாம், குழந்தை குட்டிகளுடன் கூடிவிடும்!

ஆடவர் இருவர் கண்ணன் - ராதை வேடமிட்டுப் பாடி ஆடியபடி வசூலுக்கு வருவார்கள். ஆண், பெண் பாகுபாடின்றி, அனைவருமே - இவர்களுக்கே உரிய பாணியில் - செயற்கையான கீச்சுக் குரலில் பின் பாட்டுப் பாடுவார்கள்!

உறுத்துகிற சிவப்பு நிற துர்க்கை சிலையைத் தூக்கிக் கொண்டு - பறை அடித்தவாறு - மணி ஆட்டியபடி - வேப்பிலை யும், விபூதித்தட்டுமாக வருவார்கள்!

ஒருவன் பலிக் கொடுவாள் பிடித்தபடி முன்னே நடப்பான்...

இன்னொருவன், இடையிடையே தன்னைச் சாட்டையால் அடித்துக் கொள்வான்!

இவர்களில் யாருக்கு உடல் நலமில்லாமல் போனாலும், இன்றும் கூட மருத்துவரிடம் போக மாட்டார்கள்! இரவுக் காலங்களில் நெடு நேரம் மேளம் அடித்து, ஆணும் பெண்ணும் உருக்கமாய்க் 'கன்னிமாரை' வேண்டிப் பாடி - 'நல்வாக்கு'க் கேட்பார்கள்!

பாம்பு பிடிப்பதில், இருளர் வீட்டுக் குழந்தையும் நிபுணத்து வம் பெற்றிருக்கும்! கொடிய விஷங்களுக்கு எல்லாம் முறிவு மருந்து தருவதில் வல்லவர்களான வில்லியர் மூலிகை - வேர் களை நன்கு அறிந்தவர்கள்! ஆனால், பிறருக்கு உணர்த்த மாட்டார் கள்! பிடிவாதம், இவர்களின் உடன் பிறந்த குணம்!

கடந்த முப்பதாண்டுகளாக ஊர்த் தலைவராயிருக்கும் அகஸ் தியப்ப முதலியார், 'வில்லியர் மேம்பாட்டுக்கு மட்டுமல்லாமல், நூறு நரிக்குறவர்களுக்கும் 32 வீடுகள் அமைத்து, குடும்பத்திற்கு 2 ஏக்கர் நிலமும் ஒதுக்கி உழைத்து வருகிறார்!' என்பது பாராட்ட வேண்டிய செய்தி.



# திருப்புலிவனம்



'உத்தரமேரூர் வட்டத்தில், 'புலி'யுடன் இணைந்த பெயர்களைக் கொண்ட ஊர்கள் ஆங்காங்கே பரவலாக உள்ளன என்று முன்பே அறிந்தோம். அதற்கு, இங்கிருந்த அடர்ந்த காடுகள் மட்டுமல்லாமல், புலிக்கொடி மன்னர்களான சோழர் ஆட்சியும் காரணம் என உணர்ந்தோம்.

பழைமையின் சின்னமான 'அருள்மிகு அபிதகுஜாம்பாள் சமேத வியாக்ரபுலீஸ்வரர்' கோயிலில், இதை விளக்கும் கல் வெட்டுகள் ஏராளமாக உள்ளன. இந்தக் கல்வெட்டுகளில், இந்த ஊரோடு சம்பந்தப்பட்ட சுற்றுப்புற ஊர்கள் பலவற்றின் பெயர் கள் காணப்படுகின்றன!

இந்த ஆலயத்தின் கிழக்குச் சுவரிலும், வடக்கு - மேற்குச் சுவர்களிலும் இருக்கிற கல்வெட்டுகள் இந்த ஊரைத் 'திருப்புலி வலம்' என்று சொல்வதுடன், 'திருப்பணாவனம்' என்றும் குறிப் பிடுகின்றன. மேலும், 'திருப்புலிவலமுடையார்' என ஒரு வார்த்

தைப் பிரயோகமும் காணப்படுகிறது. இது சம்பந்தமாக, எல்லா ஊர்களிலும் சொல்வது போல் இங்கே ஒரு செவிவழிக் கதை சொல்கிறார்கள்.

தென் திசை வணிகன் ஒருவன், கற்பூர மூட்டைகளை யானை மீது ஏற்றிக் கொண்டு காஞ்சி மாநகரத்துக்குப் பயணமானான்.

திருப்புலிவனத்தைக் கடக்கும்போது, 'விரைவில் வியாபாரம் முடிய வேண்டும்' என்று இவ்வூர்க் கடவுளிடம் வேண்டிக் கொண்டான்.

காஞ்சியை அடைந்து, கொண்டுபோன பொருளை நல்ல ஆதாயத்துக்கு விற்றவன், திரும்புகையில், திருப்புலிவனத்தில் செய்து கொண்ட பிரார்த்தனையை மறந்து போனான். ஊர் தாண்டி நெடுந் தொலைவு வந்தாயிற்று...

யானை, திடீரென்று ஒரு பள்ளத்தில் இறங்கிவிட்டது! வணிகன் என்ன முயன்றும் அது கரை ஏறவில்லை! பலவிதமான தந்திரங்கள் செய்தும் பயனில்லை! காலம் கடந்ததே தவிர, யானையைக் கட்டுப்படுத்திப் பாதைக்குக் கொண்டுவர இயலவில்லை!

உடலும் மனமும் சோர்ந்த நிலையில், பளிச்சென்று அந்த நினைவு வந்தது! 'திருப்புலிவனத்து ஈசனிடம் வேண்டிக்கொண்டதை மறந்துவிட்டோமே' என உணர்ந்து, வந்த வழியே ஓடினான். கோயிலை வலம் வந்து - இறைவனை வணங்கிப் பூசை செய்து, வேண்டுதலை நிறைவேற்றிவிட்டுத் திரும்பினான். அதன் பிறகு, யானை இயல்பான நிலைக்கு வந்து வணிகன் கட்டளைக்குக் கீழ்ப் படிந்தது!

''அந்த யானை இறங்கிய பள்ளமே, இன்று, 'ஆனைப் பள்ளம்' என்று அழைக்கப்படுகிறது!'' என்று ஊரில் பலபேர் உரைக்கிறார்கள். ஆனால், உத்தரமேரூருக்கும், திருப்புலிவனத்திற்கும் இடைப்பட்ட இந்தப் பள்ளம், 'அந்நாளின் யானைப் படையின் வசதிக்காக ஏற்பட்டது என்பதற்கு வரலாற்று ஆதாரங்கள் உள்ளன!' என்பது இன்னொரு சாராரின் கூற்றாக இருக்கிறது.

அந்தக் கற்பூர வணிகன் வந்து பூசையை முடித்துப் போன சிறிது நேரத்தில் - ஒரு புலி பூசை செய்ய வந்தது ! இந்தப் புலி, முற்பிறவியில் ஒரு முனிவர்! ஏதோ சாபத்தால் உரு மாறியவர்!

விமோசனத்திற்கான வழி உணர்ந்து, இவ்வூர் ஈசன் கோயிலைப் பல நாட்கள் வலம் வந்ததால், இங்குள்ள இறைவன் 'திருப்புலி வலமுடையார்' என்கிற பெயரைப் பெற்றார்.

ஒவ்வொரு நாளும், தனது முன்னைப் பழம் வினையைத் தீர்த்துக் கொள்ளச் சிவன் கோயிலுக்கு வரும் புலியின் பூசையே முதல் பூசையாக இருக்கும்! இதன் பின்னரே ஊர் மக்கள் இந்த ஆலயத்திற்கு வழிபட வருவார்கள்...

அன்று, கோயிலுக்கு வந்த புலி, தனக்கு முன்னால் யாரோ பூசை செய்திருப்பதைப் பார்த்து மிகவும் கோபம் கொண்டது! ஆத்திரத்துடன் தன் நகக்காலைத் தூக்கிச் சிவலிங்கத்தை அறைந்து விட்டது!

லிங்கத்தின் மீதுள்ள தழும்புகளைக் காட்டி, ''புலி அறைந்த வடுவைப் பாருங்கள்!'' என்று ஊர்மக்களில் சிலர் சொல்கிறார் கள்.

''அறையப்பட்ட சிவன், சினமுற்று, புலியின்மேல் கணையை ஏவினான். தப்பியோடிய புலி, திரும்பி உறும்வும், அதன் வாயில் அம்பு பாய்ந்தது. ஆதலால், அந்த இடம் 'புலி வாய்' என்கிற ஊராயிற்று. புலியின் வீழ்ச்சியால், சாபம் நீங்கி, முனிவர் தோன்றினார்! இறைவனைத் தேடி முனிவர் நடக்க, ஓரிடத்தில் காட்சி தந்து அருள் செய்தான்! எனவே, காட்சி தந்த அந்தப் பகுதிதான், இன்று, 'புத்தளி' என வழங்கப்படுகிறது!'' என்பதாக முடிகிறது, இவ்வூரின் கர்ண பரம்பரைக் கதை.

திருப்புலிவனத்திற்கு அரைக்கல் தொலைவில் ஒரு குளம் இருக்கிறது. இந்தக் குளத்தை மான்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, கீறி கீறிப் பள்ளம் பறித்துப் பெரிதாக்கினவாம்!

'இந்தக் குளத்திலிருந்துதான், சிவபூசைக்காக அந்தப்புலி தண்ணீர் கொண்டு போகும்!...' என மீண்டும் ஒரு செவிவழிக் கதை இங்கே கொஞ்சம் வந்து ஒட்டுகிறது.

இக்கோயில், குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டதாகும். தென்னாட்டு ஆலயக்கலையில், மிகவும் சிறப்பு வாய்ந்த பெரிய பெரிய துவாரபாலகர் சிலைகள் இங்கே உள்ளன.

அந்நாளில், கோயிலுக்கு என்று விடப்பட்ட நிலக் கொடை கள் பற்றியும், நந்தா விளக்குகளுக்காகத் தந்த பசுக்களின் புள்ளி

விவரங்கள் குறித்தும் இங்குள்ள கல்வெட்டுகள் விவரம் சொல்கின்றன.

ஒரு நந்தா விளக்கு எரியத் தேவைப்படும் நெய்க்காக முப்பத்திரண்டு பசுக்களும், ஒரு காளையும் அளிக்கப்பட்டிருந்தன. இப்படி முப்பத்திரண்டு விளக்குகள் எரிய, ஆயிரத்து இருபத்து நான்கு பசுக்களும் முப்பத்திரண்டு காளைகளும் இங்கு இருந்தன!

ஆனால், கல்வெட்டுப் பெருமை மட்டுமே மிஞ்சி, கோயில் பழுதுபட்டு வருகிறது. இந்தக் கோயிலுக்குத் தேவையான பொன் பொருள் எல்லாம் இந்தக் கோயிலிலேயே இருப்பதாக ஒரு கருத்து நிலவுகிறது.

எனினும் சுரங்கத்துள் இறங்கி முயல, எவர்க்கும் துணிவில்லையாம்! மூன்று தலைமுறைக்கு முன் அகழ முயன்றபோது, முயன்றவர்களுக்கு மரணம் நேர்ந்ததாம்! எனவே மேற்கொண்டு யாரும் முயல முடியாதபடி பீதி உண்டாகிவிட்டதாம்!

- இதையும், 'ஒரு கர்ண பரம்பரைக் கதை' என்றே கொள்ள வேண்டி இருக்கிறது.

வெளி மண்டபம், கல் சக்கரங்களோடு, மிக நேர்த்தியாக ஒரு தேர் போல் அமைந்திருக்கிறது.

இங்கே கோயில் கொண்டுள்ள வியாக்ரபுரீஸ்வரரைப் பற்றி, நாயன்மார்களின் நாயகரான திருநாவுக்கரசர், 'புலிவலம் புத்தூர் புகலூர்...' என்று பாடியுள்ளார். இவரது 'க்ஷேத்திரக்கோவை'யின் பதினோராவது பாடலில் இந்த ஆலயம் குறிப்பிடப்பட்டுள்ளது.

இராமலிங்க அடிகளோ, 'மாயையால் இரண்டுப்பட்டு உன் மலரடிப் புகழில்... சேயமான் நதிதன் பாங்காய்த் திருப்புலிவனத்துளானே' என்று போற்றி, அறுபத்து நான்கு செய்யுள்களை இவ்வூர் இறைவன் பெயரில் பாடி இருக்கிறார்.

இந்தப் பழைமையான ஊரின் இன்றைய நிலை, தமிழ்நாட்டுக் கிராமங்களின் அவல நிலையிலேயே உள்ளது! இவ்வளவு பெரிய கோயிலும், கோயில் சார்ந்த இடங்களும் அக்கறையில்லாமல் பாழ்பட்டுக் கிடக்கின்றன!

எல்லாப் பிரிவினரும் கலந்து வாழும் இந்த ஊருக்கு என்று ஒரு பெரிய ஏரி இருக்கிறது; ஆயிரம் ஏக்கர் ஆயக்கட்டுக்குப்

பாசன வசதி தருகிறது.

திருப்புலிவனத்துடன் - மருத்துவம்பாடி, ஆனைப்பள்ளம் போன்ற ஊர்களின் வளத்துக்கும் இந்த ஏரி உதவுகிறது.

முன்னூறு வீடுகளை உடைய இந்த ஊரின் மக்கள் தொகை: மூவாயிரத்து இருநூற்றுக்கும் மேற்பட்டது.

ஒரு காலத்தில், இங்கே ஏராளமான வேளாண் குடியினர் இருந்தனர். 'இருபத்தேழு நத்தம்' என்ற பட்டியலில், அவர்கள் முதலாவதாக இருந்தனர். ஆனால், இன்று இங்கு ஒரு வேளாண் குடி, கூட இல்லை!

புலிவாய் என்ற ஊரில் மட்டும், 'திருப்புலிவனத்தார் வீடு' என்று ஒரு குடும்பம், நெடுங்காலமாக இருந்து அண்மையில் மறைந்து விட்டது!





# களியாம்பூண்டி

'ஒரு கிராமம் எப்படி இருக்க வேண்டும்?' என்பதற்குக் 'களியாம்பூண்டி' மிகச் சிறந்த உதாரணம். .

இந்த அருமையான ஊர், உத்தரமேரூருக்கு மேற்கே, ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ளது.

உத்தரமேரூர் - வந்தவாசிச் சாலையில், காரணி மண்டபம் என்னும் இடத்திலிருந்து களியாம்பூண்டியின் வழி வடக்கே பிரிகிறது.

களியாம்பூண்டியில், ஒரு பழைமையான சிவன் கோயில் இடிபாடுகளுடன் நிற்கிறது. இங்கே, கல்வெட்டோ, ஆயிரங்கா லத்துச் சின்னங்களோ இல்லை...

ஆனால், 'இன்றைய வாழ்க்கை நாளைய வரலாறு' என்பதை உணர்ந்து, ஊரின் மேம்பாட்டை ஒவ்வொருவரும் சரித்திரம் ஆக்கி இருக்கிறார்கள்!

களியாம்பூண்டி, தேசியப் பாரம்பரியம் மிகுந்த ஊராகும். இங்கே, எல்லா இனத்தவரும் பாகுபாடு இல்லாமல் நாட்டு

விடுதலையில் ஆர்வம் கொண்டிருந்தார்கள். ஒரு சில குடும்பங்கள் மிகவும் தீவிரமாக விடுதலைப் போரில் ஈடுபட்டன.

சுதந்தரத்திற்கு முன் இந்த ஊருக்கு அடிப்படை வசதி எதுவுமே இல்லை. காரணி மண்டபத்திலிருந்து களியாம்பூண்டிக்கு, ஏரிக்கரை வழியாகத்தான் வரவேண்டும். மழைக் காலத்தில், இரண்டு கல் தொலைவில் உள்ள காரணி மண்டபத்திலிருந்து ஒரு மாட்டுவண்டி வந்து சேர இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆகிவிடும்! பாரவண்டிகள் என்றால் - சேற்று உளைகளில் சிக்கி, ஆட்களையும் மாடுகளையும் ஒரேயடியாக அயர வைத்து விடும்...

இந்த ஊராரிடையே, ஓர் உத்வேகத்தை உண்டாக்கிய இரு பெரும் சான்றோர் பற்றிக் குறிப்பிட வேண்டியது மிகவும் அவசியம்.

ஒருவர் : ஓ.சீனிவாச ரெட்டியார். எளிமையும், நேர்மையும் இவரது கண்கள். சட்டமன்ற உறுப்பினராகி, தொகுதி மேன்மைக்குச் சத்தியமாக உழைத்தவர். காந்தியச் சிந்தனைகளில் ஊறித் திளைத்த நெறியாளர்.

இன்னொருவர் : இப்போதும் வாழ்ந்து கொண்டிருக்கிற தியாகி ஏ.கே.இராமகிருஷ்ண ரெட்டியார், சுதந்தரப் போரில் இருமுறை சிறை சென்றவர். வயலூர் என்ற கிராமத்தையே நரிக்குறவர்களுக்குக் கொடையாய்க் கொடுத்தவர்!

தமிழ் நாட்டிலேயே, முதன் முதலில் பூமிதானம் தந்தவர்கள் களியாம்பூண்டி மக்களே!

1948 - 49 ஆம் ஆண்டுகளில், 'கிராம க்ஷேம அபிவிருத்திச் சங்கம்' என்று ஓர் அமைப்பைத் தொடங்கி, ஊரில் உள்ள அனைவருமே உறுப்பினர் ஆகி உள்ளனர்!

தாங்களாகவே ஒரு குழுவைத் தேர்ந்தெடுத்து, கிராமக் குடியாட்சி நடத்தி இருக்கிறார்கள்! இந்தப் பகுதியில்தான், எவர் தூண்டுதலும் இல்லாமல், இன்றைய குடியாட்சி முறைக்கு மூல வித்து ஊன்றப்பட்டது!

சுதந்தரச் சுவடு பதிந்ததும் பதியாததுமான சூழலில், அனைவரும் ஒருமித்து - ஆர்வமும், விழிப்புணர்ச்சியுமாக உழைத்து

உதாரணம் ஆனார்கள்!

கல்வி, சுகாதாரம், வேளாண்மை வளர்ச்சி, கால்நடைப் பராமரிப்பு, தேசிய சேமிப்பு, பாதை வசதி, அனாதை ஆதரவு, முதியோர் கல்வி என வேகமாக முன்னேறினார்கள்!

ஒரு நகரத்தில் அமைந்துள்ள எல்லா வசதிகளுமே இங்கே அமைந்துள்ளன! அதே சமயம், கிராமத்தின் தனித்தன்மையும் பாதுகாக்கப்பட்டுள்ளது!

தியாகி இராமகிருஷ்ண ரெட்டியாரின் முயற்சியால், ஆதரவற்ற பிள்ளைகளுக்காக இங்கே ஒரு கருணை இல்லம் உருவாகி இருக்கிறது. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் இங்கே வந்து அடைக்கலம் புகுந்து உள்ளனர்! இந்த 'இல்லம்' தவிர, தமிழக அளவிலான நரிக்குறவர் மேம்பாட்டுப் பள்ளிகள் மற்றும் 'இல்ல'ங்களின் வளர்ச்சிக்கும் இவர் நிறைய உழைத்திருக்கிறார்!

வெளி மாநிலங்களில் வாழ்கிற நம் சகோதரர்கள் மட்டுமல்லாமல், அயல் நாட்டினர் பலரும் இந்த ஊருக்கு வந்து - இதன் செயல்முறைகளைப் பார்த்துவிட்டு மனமாரப் பாராட்டி இருக்கிறார்கள்!

அப்படிக் கனடாவிலிருந்து இங்கே வந்த போன்னி கப்பூச்சினோ (BONNIE CAPPUCCINO) என்கிற பெண்மணி, தியாகி இராமகிருஷ்ண ரெட்டியாரைச் சந்தித்ததன் விளைவாக, இங்கே ஒரு பிரத்தியேகக் குழந்தைகள் காப்பகம் ஏற்பட்டுள்ளது. காந்திய நெறியிலான இந்தக் காப்பகத்திற்கு, 'செயில்ட் ஹெவன்' (CHILD HEAVEN INTERNATIONAL) என்று பெயர். இது, உண்மையிலேயே குழந்தைகளின் சொர்க்கமாகத்தான் செயல்படுகிறது! ஆண்களும், பெண்களுமாக அறுபத்தேழு மாணவர்கள் இங்கே சொகுசாகப் பராமரிக்கப்படுகிறார்கள். ஊட்டச்சத்து நிறைந்த உணவுடன் சோயாபால், சோயாதயிர், சோயா வடையெல்லாம் வழங்கிப் பிள்ளைகளைக் கனிவுடன் வளர்க்கிறார்கள்.

சாதி மத பேதமற்ற சர்வ சமயக் கூட்டு வழிபாடு மாணவரிடையே ஒருமைப்பாட்டு உணர்ச்சியை மேலோங்கச் செய்துள்ளது. 'யோகா' இவர்களின் மன - மெய்களை மேன்மைப்படுத்துகிறது. பண்ணை விவசாயத்திலிருந்து, தொழிலியல் வரை பள்

ளிப் படிப்பினூடே பல்வேறு பயிற்சிகள் பெறுகிறார்கள்.

'போன்னி'யம்மா ஆண்டுக்கு ஒரு முறை இங்கே வந்து போகிறார். இவருடைய கனவுகளை மெய்ப்பட வைப்பதில், மேலாளர் எஸ்.பி. இருதயநாதன் இதயம் பொருத்தி உழைக்கிறார்!

மொத்தத்தில், 'ஒருமாதிரி' கிராமங்களுக்கு நடுவே, அழகிய 'முன்மாதிரி' கிராமமாய்க் களியாம்பூண்டி திகழ்கிறது என்றால் மிகையே அல்ல!

களியாம்பூண்டி - 'சிறந்த கிராமம்' என்கிற பெருமையையும், அதற்கான பரிசையும் தமிழக அரசிடமிருந்து அவ்வப்போது பெற்றுள்ளது! இப்படி, இந்த ஊர், பிற ஊர்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும், முன்னோடியாகவும் திகழ்ந்து இந்திய அளவில் சிறப்புச் சேர்த்திருக்கிறது; சேர்க்கிறது!





# தண்டரை

'மணியம்' என்கிற மகத்தான ஓவியச் சக்கரவர்த்தியை உலகறியும். ஆனால், 'இவர் தண்டரைக் கிராமத்தைச் சார்ந்தவர்' என்பது மிகப் பலருக்குத் தெரியாத செய்தி!

அமரர் மணியம், பேராசிரியர் 'கல்கி' அவர்களின் இறவா வரம் பெற்ற எழுத்தோவியங்களுக்கு உயிரோவியங்கள் வரைந்து பெரும் புகழ் பெற்ற மேதை.

சரித்திரக் காலத்தை நம் கண் முன்னே நிலை நிறுத்திய ஆற்றலில் மணியம் அவர்களுக்கு மணியமே நிகர்!

'தண்டரை' என்கிற தலைப்பில் இணைந்துள்ள பொன்னியின் செல்வன்' புதின மாந்தரை யாரால் மறக்க முடியும்? வந்தியத்தேவன், குந்தவை, நந்தினி, பெரிய பழுவேட்டரையர், ஆழ்வார்க்கடியான் என்று எத்தனை எத்தனை இணையற்ற பாத்திரப் படைப்புகள்!

இவருடைய கலைத்திறன் பற்றி, 'யோக்கியனைக் கூடத் திருடத் தூண்டும் சித்திரங்கள்!' என்று மூதறிஞர் ராஜாஜி வியந்து போற்றுவார்!

மணியம், வாழ்நாள் முழுவதும் கலைத் துறைக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு - பல பரிசோதனைகள் செய்து - புகழ்ச் சிகரங்களை மேலும் மேலும் தொட்டவர்.

'மணியம் முத்திரைகள்' பத்திரிகைத் துறையில் மட்டுமல்லா மல் திரைத்துறையிலும் பதிந்து சிறந்துள்ளன. 'பார்த்திபன் கனவு' படத்திற்கு, கலை இயக்குநர், இவரே! மேலும் - அபலை அஞ்சுகம், குறவஞ்சி, காஞ்சித்தலைவன் முதலிய படங்களிலும் இவருடைய கைவண்ணங்கள் மிளிரும். 'அமர்பாலி' என்கிற இந்திப் படத்தின் மூலம், இந்தியா முழுக்க இந்தக் கலைஞரின் புகழ் பரவியது.

'இந்த இணையற்ற ஓவியர் இன்று நம்மிடையே இல்லை யே' என்கிற குறையைப் போக்க, அவருடைய ஒரே மகன் 'மணியம் செல்வன்' - மிகச் சரியான வாரிசாக வாய்த்திருப்பது கலை இலக்கிய உலகுக்கு மிகப்பெரிய வாய்ப்பு!

'ம.செ.' என எல்லாராலும் உவகையுடன் பேசப்படும் இன்றைய ஓவியமன்னர் மணியம் செல்வன், சரித்திர நிகழ்ச்சிக ளைச் சித்திரிப்பதில் தந்தைக்கு இணையானவர்; சமூக ஓவியங் கள் வரைவதில் தந்தையை மிஞ்சுபவர்! இந்த நூலிலுள்ள இவரின் அரிய ஓவியங்களே இவர் திறனுக்குச் சான்று.

இவரும், தம் தந்தையார் போலவே ஓவிய உலகில் பல புதிய பரிமாணங்களைக் காண அல்லும் பகலும் உழைப்பவர். இவருடைய ஓவியங்கள் இடம் பெறாத பத்திரிக்கைகளே இல்லை! இவரது இல்லக் கதவை, எப்போதும் யாராவது தட்டிக் கொண்டே இருப்பார்கள்!

பல பெரிய பெரிய நிறுவனங்களின் நேர்த்தி நிறைந்த காலண்டர்கள், நூல்களின் அட்டைகள் என்று இவரது தூரிகை விளையாடியபடியே இருக்கும்!

ஓய்வென்பதே இல்லாத இந்த ஒப்பற்ற ஓவியரின் கலை நுட்பம், திரைப்பட இயக்குநர் பாரதிராஜாவை ஈர்க்க, தமது 'நாடோடித் தென்றல்' திரை ஓவிய விளம்பரச் சுவரொட்டிகளை இவர் மூலம் உருவாக்கிப் பெருமை கொண்டிருக்கிறார்.

அமரர் 'மணியம்' வழி கலை வாரிசுகளாக ஓவியக்கவிஞர் அமுதோன், முத்துசாமி (ரவி), வேதகணபதி (வேதா), பிரபு,

துரைராஜ் முதலியோர் பத்திரிகைகளிலும் நூல்களிலும் தொலைக் காட்சியிலும் தத்தம் தனித்தன்மைகளைச் சிறப்பாகப் புலப்ப டுத்தி வருகிறார்கள்.

தண்டரையின் குறிப்பிடத்தகுந்த இன்னோர் ஓவியமாமணி டி.சின்னையா. இவர், எண்ணெய் வண்ண ஓவியம் வரைவதில் நிபுணர். மாமல்லபுரம் சிற்பக்கல்லூரியின் 'மோல்டிங் பள்ளி' யில் முதல்வராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். மேலும், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணனின் 'பணம்' திரைப்படத்தில் இவரின் 'கலை' உதவி குறிப்பிடத் தகுந்தது. குளிரில் நடுங்கும் ஒரு கிழவனின் சிற்பம் மறக்க முடியாதது! இவரால் வரையப் பட்ட தலைவர்களின் படங்கள் தத்ரூபமானவை! கிருஷ்ண மூர்த்தி, சேகர் போன்ற ஓவியர்களை இவர் உருவாக்கியுள்ளார்.

**உ**த்தரமேரூருக்கு மேற்கே ஏழரைக் கிலோ மீட்டர் தொலை வில் - வந்தவாசிச் சாலையில் - அமைந்துள்ள தண்டரைக்கு, மேற்படி சிறப்புடன் மேலும் சில முக்கியமான பெருமைகளும் உள்ளன.

சுமார் நூறு வீடுகளைக் கொண்ட இவ்வூரில், பெரும்பாலும் வன்னிய மரபினரே வசிக்கின்றனர்; வேளாண் தொழில் செய்து பிழைக்கின்றனர்.

முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னால், சில 'குலாலர் குடும் பங்கள்' ஆந்திர மாநிலத்திலிருந்து இங்கே வந்து நிலைத்தன. 'வீரசைவ சாலிவாகன மரபினர்' என்று தங்களை அடையாளம் காட்டிக் கொண்ட இவர்கள், 'சாதி மதங்களைக் கடந்து சமுதாயப் பணியாற்றினார்கள்!' என்றால் மிகையல்ல! இவர்களால் இந்தப் பகுதி பயனும், பெருமையும் பெற்றது!

இவர்களில் பெரும்பாலோர், மருத்துவம் தெரிந்தவர்கள்! எஞ்சியவர்கள் எல்லாரும் ஓவியம் உணர்ந்தவர்கள்!

இலை வைத்தியம் தெரிந்த - கலை உணர்வு நிறைந்த இந்தக் குடும்பங்கள், செங்கை மாவட்டத்தையும் கடந்து புகழ் பெற்றன!

பெருந்தலைவர் காமராஜ் தமது குறிப்பேட்டில் தண்டரை வைத்திய மேன்மை பற்றி எழுதி வைத்திருக்கிறார்!

'தண்டரை வைத்தியம்' வாத நோய்களுக்கு மிகுந்த பயன் அளிக்கிறது!

எண்பத்து நான்கு வகை வாதங்களில் - பாரிச வாதம், இளம்பிள்ளை வாதம், கீல் வாதம், தனுர் வாதம் போன்ற கொடிய நோய்களுக்கு இவர்களது மருந்தும், எண்ணெயும் மகத்தான பயனை அளிக்கின்றன!

மருத்துவத்திற்காக இவர்கள் வாங்கும் காசு மிகவும் குறைவு! இவர்களால் ஏழை எளிய நோயாளிகள் நிறைவான நிவாரணம் பெறுகிறார்கள்...

இந்தத் 'தண்டரை வைத்தியம்' எட்டுத் தலைமுறைக்கும் மேலாகத் தமிழ்நாட்டிலும், கர்னாடக மாநிலத்திலும் மிகவும் பிரபலம் அடைந்துள்ளது.

தண்டரையைச் சார்ந்த 'வைத்தியரத்தினம்' குமாரசாமி பக்தர், தமது கைராசியால் சென்னையில் புகழ்க்கொடி நாட்டினார். மயிலை கபாலீஸ்வரர் கோயிலுக்குப் பல அறப்பணிகள் செய்து ஆன்மீக உலகிலும் செல்வாக்குப் பெற்றார்.

இவரைத் தொடர்ந்து, இவருடைய புதல்வர்கள் உமாபதி பக்தர், வைத்தியலிங்க பக்தர் ஆகியோரும் மருத்துவத்துறையில் ஈடுபட்டுச் சேவை செய்தனர். உத்தரமேரூரில் டி.சந்திரகாந்தம் இத்துறையில் புகழோடு விளங்கியவர்.

இவர்களின் பரம்பரையில் டி.பி. குமாரசாமி (காஞ்சிபுரம்), டி.கே.செங்கல்வராயன் (கிளியனூர்), டி.கே.பஸவய்யா (திருவல்லிக்கேணி) என்.வெங்கடாஜலம் (வந்தவாசி) டி.நடராஜன் (தண்டரை), என்.சங்கரன் (தண்டரை) ச.கார்த்திகேயன் (உத்தரமேரூர்) ஆகியோர் தொடர்ந்து மருத்துவத் தொண்டு செய்கின்றனர்!

இந்த மருத்துவ மரபினர் பொம்மைகள் செய்வதிலும் வல்லவர்கள்! 'தண்டரை பொம்மைகள்' மிகவும் புகழ் பெற்றவை. வெளிநாடுகளுக்குக் கூட ஏற்றுமதி ஆகிற சிறப்புடையவை!

பெரும்பாலும் உறவு வட்டத்திலேயே சம்பந்தம் கொள்கிற முறை மாறி - இப்போது அயலிடங்களிலும் திருமணம் பேசுகிற இவர்களிடம், வரதட்சணை வாங்குகிற பழக்கம் இல்லை என்பது பாராட்ட வேண்டிய செய்தி!





# விசூர்

**மா**னாம்பதிக்கு ஒரு கல் தொலைவிலுள்ள விசூருக்கும், உத்தரமேரூருக்கும் இடையிலான தூரம் : ஒரு கிலோ மீட்டர்.

பேராசிரியர் சேக்கிழார்தாசன் ஆர்.இராமசேஷனும், வலை யப்பட்டி ஆர்.கிருஷ்ணனும் இணைந்து தொகுத்த 'அருணகிரி நாதர் அடிச்சுவட்டில்' என்கிற ஆய்வு நூல் மூலம், இது ஒரு பாடல் பெற்ற தலமென அறிய முடிகிறது.

'திரு செறிந்த...' என்று தொடங்கும் திருப்புகழில் - 'விசுவை விளங்கவரு விசாகன்' என்றும், 'விசுவை விளங்கு பெருமாளே' என்றும் பக்திப் பெருக்குடன் குறிப்பிடப்பட்டுள் ளது.

'அருணகிரிநாதர் 'விசுவை' என்று போற்றிய ஊர், விசூரே!'

என்று ஆராய்ச்சியாளர்கள் உணர்கிறார்கள்.

விசூருக்கு அண்மையிலுள்ள தண்டரை என்ற ஊருக்கு முன்பு, 'தண்டுறை' என்று பெயர். இந்தத் தண்டுறை அம்பிகை, இங்கு வந்து விசுவரூபம் எடுத்ததாக இவ்வூர் 'தலமான்மியம்' கூறுகிறது. எனவே, இத்திருத்தலம், 'விசுவமாநகர்' என அழைக்கப்பட்டதாம்.

இங்குள்ள இறைவியின் பெயர்: அகிலாண்டீஸ்வரி. இறைவன் : அகஸ்தீஸ்வரன்.

அருணகிரிநாதர் ஆழ்ந்த பற்றோடு பாடிய விசுவை முருகனுக்கு, ஒரு முகம்; நான்கு கைகள்! மயிலின் பின்னணியில் - வேழ மங்கையும், வேட மங்கையும் இரு மருங்கிருக்க - நின்ற கோலத்தில் விளங்கும் காட்சி மாட்சியுடையது!

முதலாம் ராஜராஜன் கல்வெட்டு ஒன்று, இந்த ஊரின் தொன்மைக்குச் சான்று சொல்கிறது!

அறநிலைய ஆட்சித்துறை பராமரிக்கும் இத்திருத்தலத்திற்கு 4 கி.மீ. தொலைவில், சேயாறு அமைந்துள்ளது. தைப்பூச நன்னாளில், இந்த ஆற்றங்கரையில், விசூர் மூர்த்தியுடன் சுற்றுப் புறங்களில் உள்ள பத்தொன்பது கோயில் மூர்த்திகளும் எழுந்தருளும்! மாசிமக நன்னாளில், பத்துத் திருக்கோயில் உற்சவ மூர்த்திகளும் உலா வரும்! இந்த மரபு நீண்ட நெடுங்காலமாக நிலைத்திருக்கிறது...

புலவர் விசூர் மாணிக்கம், 'விசுவநகர் வேலர் வெண்பா' நூலை இயற்றியுள்ளார்.





# கடம்பர் கோயில்

உத்தரமேரூருக்கும், காஞ்சிபுரத்திற்கும் இடையே அமைந்திருக்கிற ‘கடம்பர் கோயில்’, ஆன்மீகச் சிறப்புடைய ஊர்களில் குறிப்பிடத் தக்கது. கடம்பநாத சாமியுடன் ஆவுடை நாயகி அம்மையும் குடி கொண்டுள்ள இந்த ஊரில் - சேயாறு அமைந்திருக்கிறது. கிழக்கு நோக்கிப் பாயும் இந்த ஆறு, கடம்பர் கோயில் அருகே, சிறிது தொலைவு வடக்கு நோக்கித் திரும்பி, மீண்டும் கிழக்கே பாய்கிறது.

இந்த இடத்தை, ‘உத்தரவாகினிப் பிரவாகம்’ என்று கூறுகிறார்கள். இங்கே நீராடுவதும், இறுதிக் கடன் நிறைவேற்றுவதும் விசேஷமாய்க் கருதப்படுகிறது. ஒரு காலத்தில், ‘தந்தையின் சாம்பலைக் கங்கையில் கரைப்பதுதான் புண்ணியம்...’ என்று இந்தப் பகுதியைச் சார்ந்த ஒருவர் காசிக்குப் பயணமானாராம்.

கடம்பர் கோயில் அருகே - உத்தரவாகினிப் பிரவாகத்தைக் கடக்கிறபோது, அவரது கையிலிருந்த 'சாம்பல்', மல்லிகையாக மணம் வீசிற்றாம்!

காசியை அடைந்த சமயம், தாங்க முடியாத வீச்சம் அடித்த தாம்! எனவே, குழப்பமடைந்து, அஸ்தியைக் கங்கையில் விடா மல், கடம்பர் கோயிலுக்கே கொண்டுவர, மல்லிகை வாசனை வீசிற்றாம்!

இதனால், வியப்பும் மகிழ்ச்சியுமாக, அவர், தம் தந்தையின் சாம்பலை, 'உத்தரவாகினிப் பிரவாக'த்திலேயே விட்டு, இறுதிக் கடன் செய்தாராம்.

இன்றுகூட, கடம்பர் கோயிலின் பின்புறம் அஸ்தியைப் புதைக்கும் வழக்கம் தொடர்கிறது...

சுற்றுப்புறங்களில் உள்ளவர்கள் எல்லாம், இந்த இடத்தைக் காசியைவிடவும் மேன்மையானதாகக் கருதுகிறார்கள்.

கடம்பநாதசாமியின் எட்டாம் திருவிழா அன்று, இளைய னார் வேலூர் கோயிலிலிருந்து, பாலசுப்பிரமணிய சாமி இங்கே வருவது மரபாக இருக்கிறது.

வறுமைக் கோட்டுக்குக் கீழேயுள்ள மக்கள் இந்தக் கோயி லைச் சார்ந்து வாழ்கிறார்கள். இவர்களின் மேம்பாட்டுக்கு 'அசே ஃபா' என்கிற தொண்டு நிறுவனம் பல வகையிலும் ஒத்துழைக்கி றது. இங்குள்ள தரமான பள்ளிக்கூடம் 'அசேஃபா'வின் ஆத்மார்த் தமான பணிக்கு மிக நல்ல எடுத்துக்காட்டாகத் துலங்குகிறது!



# வெங்கச்சேரி



கடம்பர் கோயிலுக்குக் கீழ்த்திசையில், உத்தரமேரூர் - காஞ்சிபுரம் சாலையில் அமைந்துள்ள வெங்கச்சேரிக்கு உள்ள ஒரு சிறப்பு: உத்தரமேரூரின் குடி தண்ணீர்த் தேவையை முழுமை யாக நிறைவு செய்வதுதான்!

சேயாறு, இந்த ஊரைத் தொட்டுக் கொண்டு ஓடும். மணல் தெரியும் கோடைக்காலத்திலும், ஆற்றின் ஊற்று நீர், வெங்கச் சேரியின் மேல் நிலைத் தொட்டியில் ஏற்றப்பட்டு - உத்தரமேரூ ரின் தாகம் தணிக்கும்!

முக்கியமான சாலையைச் சார்ந்திருந்தாலும், வெங்கச்சேரி இன்னும் வளர்ச்சியை எதிர் நோக்கியே காத்திருக்கிறது. இங்கி ருந்து அரைக்கல் தொலைவிலுள்ள ஆதவப்பாக்கம் அசேஃபா பள்ளிக்கே, இந்த ஊர்ப் பிள்ளைகள் சென்று படிக்கிறார்கள்.

ஆதவப்பாக்கம் மட்டுமல்லாமல், வெங்கச்சேரியைச் சார்ந்த இடும்பலம், காவாம்பயிர் போன்ற கிராமங்களில் கூட - 'அசேஃபா' மக்கள் நலனில் மகத்தான நாட்டம் காட்டி உழைக்கி றது. இந்த அமைப்பின் பணிகளுடன் டாக்டர் காஞ்சி விசுவநாத னும், மேனாட்டைச் சார்ந்த ஜான் என்கிற பெண்மணியும் சுகாதார நிலையம், நூல் நிலையம் போன்றவற்றை நிறுவி இந்தப்பகுதி உயர உதவி வருகிறார்கள்!



# நெய்யாடு பாக்கம்

சேயாற்றங் கரையில் அமைந்தள்ள இந்த ஊர், பால், தயிர், நெய் வளம் நிறைந்தது.

'நெய்யாடிவாக்கம் இதைப்பாரு - இதன் நேராக ஓடுது செய்யாறு. செய்யாற்று ஸ்னானங்கள் ஜோரு - அக்கரையில், இளையனார் வேலூரு...' என, இந்தப் பகுதியில் ஒரு பாடல் வழங்குகிறது.

நெய்யாடுபாக்கத்தின் இக்கரையில் நின்று பார்த்தால், அக்கரையில் கம்பீரமாக நிற்கும் இளையனார்வேலூர் பாலசுப்பிர மணிய சுவாமி கோயில் கோபுரம் கவினாகக் காட்சி தரும்.

கல்வித்துறையில், நீண்டகாலம், குறிப்பிடத் தகுந்த பதவி களை வகித்துச் சிறப்பாகப் பணிசெய்த தாமரைத்திரு நெ.து.சுந்தரவடிவேலு- நெய்யாடுபாக்கத்தைச் சார்ந்தவர் என்பதில் இந்த ஊர் மக்கள் பெருமிதம் கொள்கிறார்கள்.

அந்தப் பெருமிதத்தில் நூற்றுக்கு நூறு உண்மை இருக்கிறது!

நெ.து.சு., இந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் பிறந்தாலும் பல சாதனைகள் நிகழ்த்தி - உத்தரமேரூர் வட்டத்திற்கு மட்டுமல்லா

மல் இந்தியத்துணைக் கண்டத்திற்கே இணையற்ற புகழைத் தந்திருக்கிறார்!

தம் ஆர்வத்தால் தலை சிறந்த கல்வியாளராகி, 'கல்வித் துறை மறுமலர்ச்சிக்கு' நல்வித்திட்ட பல்கலை மேதை. பெரி யார், காமராஜ், அண்ணா, கலைஞர் போன்றோரின் நெருங்கிய தொடர்புகளால் இவரது கல்விக் கனவுகள் யாவும் வெற்றி பெற்றன.

ஆசிரியர் பயிற்சிபெற்றுக் கல்வி அலுவலராகி, பள்ளிக் கல்வி இயக்குநராக உயர்ந்து, பல்கலைக்கழகத் துணை வேந்தரா கச் சிறந்து இவர் ஆற்றிய பணிகள் ஏராளம்!

இலவசச் சீருடை, மதிய உணவு, பள்ளிச் சீரமைப்பு ஆகிய மும்மணித் திட்டங்கள் இவருடைய பணிக்காலத்தில்தான் நடை முறைப் படுத்தப்பட்டன.

'கல்வித் தந்தை' என்று கற்றோராலேயே போற்றப்படுகிற இவர், கல்வி மேம்பாட்டு ஆராய்ச்சிக்காக வாழ்நாளின் பெரும் பகுதியைச் செலவிட்டிருக்கிறார்!

இவர் மேற்கொண்ட உலகப் பயணங்கள், நம் நாட்டுக் கல்வித் தரத்தை உயர்த்தும் நோக்கத்திற்கானவை. அயல் நாடுகளின் அரிய கல்வி நிறுவனங்கள் அத்தனையிலும் இவரது அடிச்சுவடுகள் பல முறை பதிந்துள்ளன!

மிக நல்ல சிந்தனையாளர்; பேச்சாளர்; எழுத்தாளர். குழந் தைகளுக்கும், பெரியவர்களுக்குமாக ஐம்பது நூல்கள்வரை எழு தியுள்ளார். சிறுவர் நூல்களில் 'வள்ளுவன் வரிசை' குறிப்பிடத் தகுந்தவை. பயண நூல்களில், 'அங்கும் இங்கும்' சிறந்த பயண நூலுக்கான அரசு பரிசு பெற்றது. மூன்று பகுதிகள் கொண்ட 'நினைவலைகள்' என்கிற இவருடைய வாழ்க்கை வரலாற்று நூல் 'அந்த வகை நூல் எப்படி அமைய வேண்டும்?' என்பதற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு.

'தமிழ்நாடு' நாளிதழில் பணியாற்றியதுடன், 'கூரியர்' இத ழின் கௌரவ ஆசிரியராக இருந்த அனுபவமும் இவருக்கு உண்டு. சென்னைப் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்ற இவருக்கு, இந்திய அரசு 'பத்மஸ்ரீ' விருதும், சோவியத் அரசு 'நேரு' விருதும் தந்து சிறப்பித்துள்ளன.

திருக்குறளில் ஈடுபாடு நிறைந்த நெறியாளர், நெ.து.சு., குறள்வழி வாழ்வு நடத்தி வரும் சான்றோர்.

நெய்யாடுபாக்கத்தில் 'ஜெகதீசன் பாய்த் தொழிற்சாலை' என்று ஒரு நிறுவனம் செயல்படுகிறது; மிக மேன்மையான பாய்கள், பல்வேறு வண்ணச் சித்திர வேலைப்பாடுகளுடன் நெய்யப்படுகின்றன.

சேயாற்றின் வெள்ளத்தால் நெய்யாடுபாக்கம் அடிக்கடி பாதிக்கப்பட்டாலும், ஊர்மக்களின் முயற்சியால், வயல்வெளி விரைவிலேயே பழைய நிலையை அடைந்து பசுமை பூத்துச் சிரிக்கும்!






புலிவாய் - ஊர் சிறியதானாலும் ஏரி கொஞ்சம் பெரியது. எந்தக் காலத்தில் எந்தக் 'கோன்' வெட்டினானோ?... 'கோனேரி' என வழங்கப்படும் இந்த ஏரியால், கிராம வளம் நிலைத்துள்ளது.

ஏரியின் அருகில் கோயில் கொண்டுள்ள விநாயகரைக் 'கோனேரிவிநாயகர்' என்று போற்றுகிறார்கள். கொஞ்சம் பெரிய தான மகாமுனீஸ்வரர் கோயில், பழைமையுற்று நிற்கிறது.

மேலும், பள்ளிப் படிப்பில்லாத பலர் மருத்துவம், கலை, இலக்கியம், நகைச்சுவை, நடிப்புத் துறைகளில் விற்பன்னர்களாக விளங்கினார்கள்; விளங்குகிறார்கள்!

இந்த மண்ணுக்கு உரிய வேளாளர்களில் பலர், அறிவாற்ற லும் கவித்துவமும் நிறைந்து துலங்கி இருக்கிறார்கள்!

புலிவாயில் பிறந்து காஞ்சியில் புகழுடன் வாழ்ந்த சோணா சல பாரதியை, அன்றைய வாரியார் எனலாம். இளமை தொட்டே, புராணங்களை நயம்படச் சொல்லி நாடெல்லாம் புகழ் பெற்றார். தமது பதினான்காம் வயதிலேயே ஆசுகவியான வர். சிற்றிலக்கிய வகையிலான ஆயிரம் பாடல்கள் கொண்ட 'திரட்டு', இவர் பெயரைப் பேசும். சிவப்பிரகாசர், குமரகுருபரர், சிவஞான முனிவர் ஆகியோரின் நூல்களுடன் இவர் நூல்களும் ஒப்பிடப்படும்.

சோணாசலபாரதியின் திருக்கச்சி ஏகம்பர் திரிபு அந்தாதி, குமரக்கோட்டம் திருவடிமாலை, திருவருணை பதிற்றுப்பத்தந் தாதி போன்றவை குறிப்பிடத் தகுந்த படைப்புகள். ஆன்மீகம் வளர்க்க ரங்கூன் சென்றவர், அங்குள்ள முருகனை, 'கம்பைச் சந்நிதி முறை' என்கிற நூல் மூலம் போற்றியுள்ளார்.

பொதுநலத் தொண்டில் ஈடுபாடு நிறைந்த சீர்திருத்தவாதி சேதுமாதவன், 'அறிவியல் கண்ணோட்டத்துடன் கூடிய விவசாய மேதை' என்கிற தன்மையில் புலிவாய்க்குப் புகழ் விளைவித்து இருக்கிறார்.

தத்துவ உலகம் போற்றிப் பாராட்டுகிற அறிஞர் அருணை வடிவேல் முதலியார் பிறந்ததும் இந்த ஊரில்தான். கல்லூரி வாழ்வு அமையாத சூழலில், சொந்த முயற்சியால் 'வித்வான்' ஆகி, தமிழ்ப் பேராசிரியரான பெருமை உடையவர்.

காஞ்சி பச்சையப்பன் பள்ளியிலே பணிபுரிந்து கொண்டிருந் தவரை, தருமபுர ஆதீனத் தமிழ்க்கல்லூரி ஏற்றுப் போற்றியது. பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் 'திருக்குறள் இருக்கை' இவருக்குச் சிறப்புச் சேர்த்தது.

'சிவஞான போதம்' - எளிய தமிழில், எல்லாரும் படிக்கிற வகையில் கிடைத்திருப்பதற்குக் காரணம் இவரே!

திருமுறைத் திருநெறி, முப்பொருள் இயல்பு, சிவபோக சாரம், திருமுறைகளில் திருக்குறள், சைவ சித்தாந்த கலைச் சொல்லகராதி, காஞ்சிப் புராண உரை, தக்கயாகப் பரணி உரை என்று ஏராளமான ஆய்வு - விளக்க நூல்களைப் படைத்திருக்கிற அருணை வடிவேல் முதலியார் நமது நாட்டுக்கும், சைவசித்தாந்த உலகுக்கும் கிடைத்துள்ள மிக நல்ல தவப் புதல்வர்.

தமிழை இசைக்கிற இலங்கையில் - குறிப்பாக யாழ்ப்பாணத்தில் - இவரது தத்துவப் பேருரைகள் பலமுறை நிகழ்ந்துள்ளன!

அருணை வடிவேல் முதலியாரின் மகன் பேராசிரியர் பால றாவாயன், லயோலா கல்லூரியின் தமிழ்த் துறைக்குப் பெருமை சேர்ப்பவர். இலங்கை, சிங்கப்பூர் நாடுகள் இவரது இலக்கியச் சிறப்புரைகளை நுகர்ந்துள்ளன. படிக்கும் காலத்திலேயே, 'கல்லூரிக் கவிஞர்' என்று கவியரசு கண்ணதாசனால் பட்டம் பெற்றவர். 'வேளாண்மை வித்தகர் தியாகராஜ முதலியார்' என்கிற வாழ்க்கை வரலாற்று நூல், இவரது உரைநடைத் திறனுக்குச் சான்று சொல்லும்.

புலிவாயிலும் - இந்த ஊரைச் சூழ்ந்துள்ள மலையாங்குளம், படூர், சீரடிக்குப்பம், திருப்புலிவனம், மருதம், அப்பயநல்லூர், கன்னிக்குளம் முதலிய ஊர்களிலும் - மருத்துவ வல்லுநர்களும், மக்களைச் சிரிக்க வைத்து மன வலி போக்கும் நகைச்சுவை வல்லுநர்களும் நிறைந்து வாழ்ந்தனர்; வாழ்கின்றனர்.

இந்த நகைச்சுவை மன்னர்களைப் 'பகல் வேஷக்காரர்கள்' என்று குறிப்பிடுகிறார்கள். கிராமம் கிராமமாக இவர்களின் பயணம் தொடரும். 'இந்தப் பகுதி உனக்கு, அந்தப் பகுதி எனக்கு!' என இவர்களாகவே 'ராஜ்யம்' பிரித்துக் கொள்வார்கள். தோட்டி வேடத்திலிருந்து துரை வேடம் வரை நாளுக்கு ஒரு வேடமணிந்து அந்தப் பாத்திரமாகவே மாறிவிடுவார்கள்! பஞ்சாங்க ஐயர், 'மொட்டைப் பாப்பாத்தி', நரிக்குறவன், நரிக்குறத்தி, குடுகுடுப்பைக்காரன் என்று - அரை மாதம் வரை விதம்விதமாக வேடமணிந்து வீடு வீடாக வருவார்கள்! கடைசி நாளன்று நெல்லோ, பணமோ வசூல் செய்து கொள்வார்கள்!

''இந்தா, பிடி வாரண்டு!'' என்று போலீஸ் வேடமணிந்து நடிக்கிற பகல் வேடக்காரர்களைக் கண்டு பலர் பயந்து ஓடியிருக்கிறார்கள்!

தாலுககா அலுவலக அமீனாவாக, வரி தராத வீட்டில் 'ஜப்தி' செய்ய வரும் அப்பயநல்லூர்க் கலைஞர்களைக் கண்டு அரண்டு நடுங்கிய சம்பவங்களும் உண்டு! ஒரு சமயம் மைசூர் அரண்மனை வளாகத்து உயர் அதிகாரிகளில் ஒருவர், இவர்களின் பெண் வேடத்தில் மயங்கித் தூது அனுப்பிய நிகழ்ச்சி இவர்களின் ஒப்பனை மற்றும் நடிப்பு நுட்பத்திற்கு அத்தாட்சியாகும்!



# மருதம்

இங்கே நாற்பது ஏக்கர் பரப்பளவில் ஒரு கோட்டை இருந்ததாம்! குறும்பர்களுக்கு உரித்தான அக்கோட்டையை, கிருஷ்ணதேவராயர் அழித்துவிட்டாராம்!



# உரக்காட்டுப் பேட்டை

தழை உரம் தருவதில் தன்னிகரில்லாமல் திகழ்ந்த காடு மண்டிய ஊர் என்பதால், இங்கே உருவான 'பேட்டை', 'உரக்காட்டுப்பேட்டை' என அழைக்கப்பட்டது.

என்றாலும், பாமரர்களிலிருந்து படித்தவர்கள் வரை 'ஒரக் காட்டுப்பேட்டை' என்றே குறிப்பிடுகிறார்கள்.

உலகப் பந்தில் அணுவளவுள்ள இந்த ஊரை, 'பாடல் பெற்ற தலம்' என்று அடையாளம் காட்டலாம்.

சிவனையோ, பெருமாளையோ பாடினால்தான் தலப் பாட லாகுமா? கவிஞர் தணிகைச்செல்வன், தாம் பிறந்த மண்ணுக்கா கவே ஒரு கவிதை இயற்றி, உரக்காட்டுப்பேட்டையைப் பாடல் பெற்ற தலமாக்கி இருக்கிறார்!

'ஒரு துண்டு இந்தியாவும் நானும்' என்கிற இவருடைய கவிதை நூலிலிருந்து சில வரிகள்:

பாலாற்றின் மேற்குக் கரையில்
ஒரு துண்டு இந்தியா!
எப்போது அந்த ஊர்
முளைத்தது - என்று
யாருக்குமே தெரியாது!

சின்னத் தெருப்
பிள்ளையார்க் கோயிலுக்குப் பின்னால்
ஒரு வட்டெழுத்து நடுகல்
இன்றைக்கும்
மொட்டையாய் நிற்கிறது.
அதற்கு எத்தனை வயதாகிறது என்று
எந்தச் சரித்திர ஆசிரியனும் சொல்லாததால்
எங்கள் ஊரின் வயதும்
இன்னும் தமிழைப் போலவே
சர்ச்சைக்குரியதாயிருக்கிறது!

இப்படிச் சொல்லத் தொடங்குகிற கவிஞர், மனிதாபிமானம் நிறைந்த சர்வதேசியச் சிந்தனையாளர். பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைப்பவர். இவருடைய ஆளுமை நிறைந்த 'எழுத்'தாலும், பேச்சாலும் ஈர்க்கப்பட்டு ஒரு புதிய முற்போக்கு இலக்கியப் பரம்பரையே உருவாகியுள்ளது!

முன்னணிக் கவிஞருள் முக்கியமான இவர் - தணிகைச் செல்வன் கவிதைகள், சமூகசேவகி சேரிக்குப் போனாள், உலக்கையிலும் பூப்பூக்கும் முதலிய கவிதை நூல்கள் மூலம் படித்தவர்களையும், பாமரர்களையும் ஒருங்கே கவர்ந்தவர்! மிகப் பெரிய மாநாடுகள், வானொலி, தொலைக்காட்சி என்று இவர் கவிதைக் குரல் மக்களுக்காகத் தொடர்ந்து ஒலிக்கும்.

'நண்பர்களைப்போல் நடிப்பவர்கள்' என்கிற புத்தகம் இவரது உரைநடை வளத்திற்கு உதாரணமாகும்.

பள்ளிப் பருவத்திலேயே சீர்திருத்த நாடகங்கள் எழுதி மேடை ஏற்றிய தணிகைச் செல்வன், 'சின்னத்திரை'க்காகப் பல பரிசோதனை முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்.

**சி**ன்ன ஊர் என்றாலும், 'மக்கள் இங்கே பேருள்ளங்களோடு வாழ்ந்திருக்கிறார்கள்!' என்பதற்கு, எந்தக் காலத்திலோ கட்டப்பட்ட பெரிய சிவன் கோயில் சான்றாகத் துலங்குகிறது. நான்கே தெருக்களில் ஆன இந்தச் சிறிய கிராமத்தில், நகரத்தில் அமைவது போன்ற விரிவ்ான கோயில்! இங்கே உறையும் இறைவன் பெயர்: குணம்தந்த ஈஸ்வரன்.

அழகிய குளத்துடன் கூடிய இந்த ஊரின் வாழ்வு, பெரும்பாலும் நெசவாலேயே நிகழ்கிறது.

அக்காலத்தில் இங்கே வாழ்ந்த ஓர் ஆசுகவி, காவித்தண்டலத்து வேளாண்குடிச் செல்வந்தர் ஒருவரால் அவமானப்பட்டு அவரை அறம்பாடி அழித்தாராம்!

நூறு ஆண்டுகளுக்கு முன்னால், வேதாசல முதலியார் என்கிற பெரும் பண்டிர் இங்கே வாழ்ந்திருக்கிறார். இன்றளவும், இந்த மாவட்டத்தில் - மூலம் மாறாமல் பரவலாக நடைபெற்று வரும் 'சூரசம்மாரம் கூத்து' இவரால் உருவாக்கப்பட்டதே!

வேதாசலனாரின் பழைய நாடக மன்றத்தைத் தொடர்ந்து, இங்கே தொடங்கப்பட்ட நாடக மன்றங்களில் - 'இளங்கோ நாடக மன்றம்' குறிப்பிடத் தகுந்தது. இந்த மன்றம், முற்போக்குச் சிந்தனைகள் நிறைந்த சமூக நாடகங்களை அரங்கேற்றிப் புகழ் பெற்றது!

1925 ஆம் ஆண்டிலேயே - உரக்காட்டுப்பேட்டை, அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றுவிட்டது!' என்பது ஓர் ஆச்சரியமான செய்தி!

செங்கை மாவட்டத்திலேயே, முதன் முதலில் சுயமரியாதை இயக்கம் செல்வாக்குப் பெற்றது இந்த ஊரில்தான்!

உரக்காட்டுப் பேட்டையிலுள்ள, 'தீப்பாய்ந்தாள் கொல்லை' என்கிற நிலப்பகுதி பற்றி ஓர் உருக்கமான கதை சொல்கிறார்கள். கற்புக்கரசி ஒருத்தி, எந்தக் காலத்திலோ, யார் தடுத்தும் கேட்காமல், கணவனுடன் 'உடன்கட்டை' ஏறி உயிர் துறந்தாளாம்! தலைமுறைகள் மாறினாலும், இந்த மண்ணில் அவள் நினைவு மாறவில்லை என்பதற்கு, 'தீப்பாய்ந்தாள் கொல்லை' ஒரு கல்வெட்டாய்த் திகழ்கிறது!

பண்டிதர் வேதாசல முதலியார் பாலாற்றங்கரையில், நிழலுக்காக ஓர் ஆலமரம் வளர்த்தார். நெடுங்காலம் தழைத்து நின்ற அந்த ஆலமரம் இப்போது இல்லை என்றாலும், ஆற்றங்கரையின் அந்தப் பகுதி 'வேதாசல ஆலமரத்துறை' என்றே குறிப்பிடப்படுகிறது!





# சீட்டணஞ்சேரி

உத்தரமேரூரின் வடகிழக்கே, அரும்புலியூர் அருகே அமைந்துள்ள சீட்டணஞ்சேரி, அந்நாளில் 'கிருஷ்ணாபுரம்' எனப் பட்டது.

இங்கே, ஒரு தொன்மையான பெரிய சிவன் கோயில் இருக்கிறது. இறைவன் பெயர், திருக்காலீஸ்வரர்; இறைவியின் பெயர் சிவகாமசுந்தரி.

திருப்புலிவனத்தில், ஈசனைப் புலி பூசை செய்ததாக ஒரு கதை வழங்குகிற மாதிரி - இங்கே பசு பூசை செய்ததால், இறைவனுக்குத் திருக்காலீஸ்வரர் என்கிற பெயர் வாய்த்தது என்கிறார்கள்.

சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னால், இங்கே வாழ்ந்த கு.கோவிந்தராச முதலியார், 'ஸ்ரீகாலிநாதர் பதிகம்' என்கிற

நூலை இயற்றியுள்ளார். இதை அடிப்படையாகக் கொண்டு நல்லாசிரியர் எஸ்.என்.ஜெயராமப் பிள்ளை என்பவர் ஒரு தலபுராண நூலைச் செய்திருக்கிறார்.

இக்கோயிலின் முக்கிய வாயிலிலுள்ள கம்பீரமான துவாரபாலகர் சிலைகள், மதுரைக் கோயிலில் இருக்கிறாற் போல் ஆனவை.

இங்கே இரண்டு கொடிமரங்கள் உள்ளன! அம்பிகைக்கும், தனியே பத்து நாள் பிரம்மோற்சவம் நடப்பதே இதற்குக் காரணம்!

இறைவனைப் பூசித்ததாகச் சொல்லப்படும் பசுவின் சிற்பம் கோயிலுக்குள் இருக்கிறது. இந்தப் பசுவிற்கு, இரண்டு தலைகள் உள்ளன!

'ஆத்தூர் - பாலூர் அழகான சீட்டணஞ்சேரி' என ஊர் மக்கள் வர்ணிக்கிறார்கள்.

கரும்பும் நெல்லும் செழித்துக் கொழிக்கும் இக்கிராமத்தில் நீண்ட நெடுங்காலத்திற்கு முன்னால் சீட்டண்ணன், குறும்பண்ணன், சாத்தண்ணன் என்னும் செல்வாக்கு நிறைந்த சகோதரர்கள் பெரு வாழ்வு வாழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் நினைவாகவே, இவ்வூர், 'சீட்டணஞ்சேரி' என வழங்கப்பட்டதாம்.





# காவித்தண்டலம்

‘இந்த ஊரில் யாரும் வளமாக இருக்க முடிவதில்லை!’ என்று இங்கே ஓர் எண்ணம் நிலவுகிறது. “இதற்குக் காரணம், இரட்டைப் புலவர்களின் சாபம்!” என்கிறார்கள். அக்காலத்தில் ஓமனகன், கம்பத்தான் என்று இருவர் காவித்தண்டலத்தில் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களை நாடி வந்த இரட்டைப் புலவர்களின் மதிப்பறியாத ஓமனகனும், கம்பத்தானும் எள்ளி நகையாடி இழிவு செய்திருக்கிறார்கள்.

இதனால் கோபம் கொண்ட இரட்டைப் புலவர்கள், “ஒரு காவித் தண்டலத்தில் ஓமனகன் வீடு இருகாலும் பற்றி எரிக - அருகாரும், கம்பத்தான் வீடும் கலந்தெரிய - அவன் சம்பத்து எல்லாம் போய்...” என எரிச்சலுடன் பாடினார்கள்.

உடனே கம்பத்தான், ஓமனகன் வீடுகள் எரிந்து போயினவாம்! பிறகு, அந்த இடத்தில், யார் வீடு கட்டினாலும் விளங்குவதில்லையாம்! எனவே இன்றளவும் கூட அப்பகுதியில் ஒருவரும் வீடு கட்ட முன்வருவதில்லையாம்!



# பினாயூர்

மலைகள் குறைந்த உத்தரமேரூர் வட்டாரத்தில் பினாயூர் ஒரு மலைக் கிராமம் ஆகும். இப்பகுதியில், இது வேளாண்மைச் சிறப்புடைய ஊர் என்றும் சொல்லலாம். பசுமைப் புரட்சியில், ஆர்வமாக உள்ளவர்கள் இங்கே மிகுதியாக உள்ளனர். அரிமா மோகன், அம்பேத்கார் மன்றத் தலைவர் செல்வராஜ் போன்றவர்களை இந்த ஊரின் முன்னோடி விவசாயிகள் என்று சொல்லலாம்.. இவர்களால் கரும்பும், நெல்லும் செழிப்பாக விளைகின்றன.

பினாயூர் தவிர - குண்ணவாக்கம், பாலேச்வரம், அருங்குன்றம் ஆகிய ஊர்களிலும் மலைகள் உள்ளன.




இவ்வூரில் ஒரு பழைமையான சிவன்கோயில் இருக்கிறது. இங்குள்ள தேவியின் பெயர் : பான்மொழி அம்மன்.

இங்கே சோழர் காலக் கல்வெட்டுகள் உள்ளன.

சுந்தரபாண்டியன் - கோனேரி மெய்கண்டான் போன்றோரின் பெயர்கள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

நீண்ட காலம் மழையில்லாமல் மக்கள் சிரமப்பட்டபோது, பேரணக்காலூர் ரங்கசாமி முதலியார் என்பவர், இக்கோயிலினுள் சென்று மனமுருகப் பாடினாராம். படிப்பறிவே இல்லாத இவர் பாடல் முடிந்த உடனே இங்கே மழை பெய்ததாம்!

சட்டம் பயின்ற போதிலும் வழக்கறிஞர் தொழில் செய்யாமல், மக்கள் தொண்டில் ஈடுபட்ட டி.ஆர்.ஞானசேரன் இந்த ஊரைச் சேர்ந்தவர்!

இங்கே, நாற்பது ஏக்கர் பரப்பளவில் ஒரு கோட்டை இருந்திருக்கிறது. குறும்பர்களுக்கு உரியதான அக்கோட்டையைக் கிருஷ்ணதேவராயர் அழித்துவிட்டாராம்!



# காரணி மண்டபம்

'அனைத்துக்கும் காரணமானவன் இறைவனே' என்பதை விளக்க, இறைவன் இவ்வூரில் 'காரணீஸ்வரர்' என்று பெயர் பெற்றிருக்கிறார்.

'காரணமண்டபம்' என்ற ஊர்ப் பெயர், இன்று காரணிமண்டபம்' என மருவி இருக்கிறது.

இந்த ஊரின் அருகே, 'அம்மை அப்பர்' பெயரால் 'அம்மையப்பநல்லூர்' என்கிற ஊர் ஒன்று விளங்குகிறது.

# சாலவாக்கம்



திப்புசுல்தானின் இளமைக் காலத்தோடு, சாலவாக்கம் தொடர்பு கொண்டிருந்ததாக இந்த ஊர் மக்கள் தெரிவிக்கிறார்கள். இங்கே, பழம் பெரும் கோட்டை ஒன்று இருந்ததற்கான சான்றும் உள்ளது. இங்கிருந்து ஆண்ட மன்னன்: 'நவாப் சாகிப்' என்று கல்வெட்டு சொல்கிறது.

அக்காலத்தில் 'சீவல் பாக்கு' மொத்த வணிகம் சாலவாக்கத்தில் நடைபெற்றுள்ளது!

இவ்வூரிலுள்ள சொர்ணபுரீஸ்வரர் கோயில் கருவறையில் சுரங்கப்பாதை உள்ளது. அருகிலுள்ள காட்டுக்குச் செல்லும் இந்த வழி, இப்போது அடைபட்டுவிட்டது. இதிலிருந்து இறை உருவங்கள் சில கிடைத்தனவாம்!



# மேநல்லூர்

சுதந்திரத்திற்கு முன், அபூர்வமாய்ப் பள்ளிகள் இருந்த ஊர்களில் மேநல்லூர் ஒன்று.

இன்று, தன்னிறைவுத் திட்டங்களால் சிறந்து விளங்கும் ஊராக இது திகழ்கிறது.

இங்கே, பத்துக் கோயில்கள் உள்ளன.



# இளநகர்

இளநகரில் ஒரு துறவியின் எளிய சமாதி இருக்கிறது.

கிராம தேவதைக் கோயில் திருவிழாவின் போது, ஒரு பீங்கான் குடுவையில் மதுவை நிறைத்து இச்சமாதி அருகே புதைப்பது மரபாக இருக்கிறது.

அடுத்த ஆண்டு, திருவிழாவின் போது, அந்த இடத்தைத் தோண்டிப் பார்க்கிறார்கள். குடுவையில் உள்ள மது குறையாமல் இருந்தால், 'ஊருக்கு நன்மை' என்று கருதுகிறார்கள்!

இந்த நம்பிக்கையும், வழக்கமும் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இங்கே நிலவி வருகின்றன!

இளநகரிலிருந்து பெருநகர் செல்லும் வழியில் வட்டப் பாறைகள் நிறைய உள்ளன; உயர்வும் தாழ்வுமான பாறைகள். அக்காலத்தில் - அவரவர் தகுதிக்கு ஏற்ப, அந்தப் பாறைகளில் அமர்ந்து 'பஞ்சாயத்து'ப் பேசியதாகச் சொல்கிறார்கள். இவற்றை, 'முன்னோரின் புதைகுழிகளுக்கான அடையாளங்கள்' என்று கருதுபவர்களும் உள்ளனர்.




# மல்லியங்கரணை

மல்லியங்கரணை, உத்தரமேரூருக்கு ஆறு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

இங்கே, 'இராமகிருஷ்ணா மிஷன்', ஒரு பள்ளியையும், மாணவர் விடுதியையும் நடத்துகிறது.

இதற்கு, நூற்று ஐம்பது ஏக்கர் நன்செய் நிலம் உரிமையாக இருக்கிறது!

1930-32 ஆம் ஆண்டுகளின்போது, கப்பல் வணிகரான மதுரை வெங்கடவரத அய்யங்கார் மனைவி ராகவம்மாவால் இந்தக் கிராமம் கொடையாக வழங்கப்பட்டது.



# கடல் மங்கலம்

சுற்றிலும் 'மடுவு' சூழ்ந்திருப்பதால், இவ்வூர் கடல்மங்கலம் எனப்படுகிறது.

இங்கே வேத விற்பன்னர்களும், தத்துவ மேதைகளும், அறிவியல் அறிஞர்களும் பெருமளவு வாழ்ந்திருக்கிறார்கள்.

இங்கே, ஒரு பெரிய மண்டபச் சுவடு தெரிகிறது. அங்கே, ஓர் ஆங்கில அதிகாரி இருந்ததாகச் சொல்கிறார்கள்; மண்டபத்தின் அருகே உள்ள குளத்தை, 'துரைக்குளம்' என்கிறார்கள்.

கடல்மங்கலத்தில், பெரியபெரிய செந்தாழம் புதர்கள் மண்டி உள்ளன; இவை பூத்துக் குலுங்கும் காலங்களில், ஊரின் சுற்றுச் சூழலில் ஒரு மகத்தான மணம் கலந்து கமழும்.

பொதுவாக, எல்லா இடங்களிலும், செந்தாழையைக் காண்பது அரிது!




மக்களில் பெரும்பாலோர் விடுகதைகள், சொல் அலங்காரங்கள் முதலியவற்றில் ஈடுபாடு காட்டுவது இயல்பு. பயனான முறையில் பொழுது போக்கவும், சிந்தனைக்கு வேலை தரவும் இவை பயன்படுகின்றன. அந்த வகையில், உத்தரமேரூர் வட்டாரத்திற்கு என்று பல விடுகதைகள் உள்ளன. எடுத்துக்காட்டுக்குச் சில புதிர்க் கோலங்கள்...

1. எருக்கிலை பழுப்பதேன்? எருமைக்கன்று சாவதேன்?

2. கூழ் கொதிப்பதேன்? குழந்தை அழுவதேன்?

3. 'கா'வன்னா 'கொ'வன்னா ஆவதேன்? காளைமாடு பாய்வதேன்?

4. அரைச்சுவர் வைப்பதேன்? ஆண்டி குல்லா போடுவதேன்?

5. ஆலிலை பழுப்பதேன்? இராவழி நடப்பதேன்?

6. நொண்டி நடந்து போவது எப்படி? மண்டி நெல் அளப்பது எப்படி?

7. சிறிய ஊர் பட்டணம் ஆவது எப்படி? வெறியர் மயங்கித் திரிவது எப்படி?

8. முக்கால் பணம் முழுப்பணம் ஆவது எப்படி? மொண்டி ஆடு தண்ணீர் குடிப்பது எப்படி?

விடைகள் :1. பால் அற்று 2. ஆற்றுவார் அற்று 3. கொம்பினால் 4. தலைமறைய 5. பறிப்பார் இல்லாததால் 6. மரக்காலால் 7. குடியேறி 8. கால்கூடி.



# அரிய தொண்டுகள் செய்யும் அசேஃபா

உத்தரமேரூர் வட்டத்தின் ஊடே, எந்த ஊரில் அடி பதித்தாலும், அசேஃபாவின் தொண்டுகள் நம் மனத்தைத் தொடும்!

Association For Serva Seva Farms என்பதன் சுருக்கமே ASSEFA அசேஃபா எனப்படுகிறது.

காந்தி அடிகளின் கனவுகளையும், வினோபா பாவேவின் சிந்தனைகளையும் வெற்றி பெறச் செய்து - தன்னிறைவுக் கிராமங்களை உருவாக்குவதே அசேஃபாவின் தலையாய குறிக் கோள்.

இந்த அமைப்புடன், Foster Parents 'Plan' International என்கிற சர்வ தேச சேவை நிறுவனமும் இணைந்து உதவுகிறது.

'உத்தரமேரூர் வளர்ச்சித் திட்டம்' என்பது 'அசேஃபா' - 'பிளான்' ஆகியவற்றின் கூட்டு முயற்சியாகும்.

1985 அக்டோபர் 2 ஆம் நாள், காந்தி பிறந்த நாளில் தொடங்கப்பட்ட 'உத்தரமேரூர் திட்டம்', 1986 மார்ச்சிலிருந்து தீவிரமாக வளர்ந்து வருகிறது.

உத்தரமேரூர் வட்ட வளர்ச்சிக்கான அசேஃபா தலைமைய கம், செங்கல்பட்டிலிருந்து செயல்படுகிறது. நிர்வாக வசதிக்காக காரணிமண்டபம், சாலவாக்கம், மணிதோட்டம், குண்ணவாக்கம் ஆகிய இடங்களிலிருந்து அசேஃபா பல அரிய பணிகள் செய்கின் றன. இதன் சேவையில் திளைக்கிற ஊர்களின் எண்ணிக்கை : 270. இவற்றுள், உத்தரமேரூர் வட்டத்தின் நூற்று அறுபத்து நான்கு வருவாய்க் கிராமங்களுடன் இணைந்த குக்கிராமங்களும் அடங் கும்.

''அசேஃபா, உத்தரமேரூர் வட்டத்தைத் தேர்ந்தெடுத்து உதவு வதற்குக் காரணம் : வினோபாபாவே பூமி தானம் கேட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்தபோது, முதன் முதலில் வெற்றி கிட்டியது இங்கேதான்!'' என விவரிக்கிறார், திட்ட இயக்குநர் எம்.எஸ். சண்முகம்.

களியாம்பூண்டியைச் சேர்ந்த தியாகி ஏ.கே.இராமகிருஷ்ண ரெட்டியார் மனமுவந்து வயலூர் கிராமத்தையே கொடையாக வழங்கி வழி காட்டியதைத் தொடர்ந்து, அறுபது கிராமங்கள் தானமாய்க் கிடைத்தன!

என்றாலும், நெடுங்காலம் வரை, இந்தக் கொடை நிலம் என்ன நோக்கத்திற்காக வழங்கப்பட்டதோ அதற்குப் பயன்படா மலே இருந்தது! இந்த நிலையை மாற்றி, அந்த மண்ணால் ஏழை எளிய மக்கள் பயன் பெறுமாறு செய்த பெருமை அசேஃபா வையே சாரும்.

அசேஃபாவின் கொள்கைகள்: அடி மட்ட ஏழை மக்களுக்கு எல்லா வகையிலும் உதவுவது, கிராம சுயாட்சிச் சிந்தனையை மேம்படுத்துவது, பொதுவான கிராம நலப் பணிகளில் ஈடுபடச் செயலூக்கம் நிறைந்த சிறு சிறு குழுக்களை அமைப்பது, பத்துக் கிராம சபைகள் இணைந்து- சமூகத் தேவைகளைத் திட்டமிடு வது; அவற்றை நடைமுறைப் படுத்துவது.

அசேஃபா - 'தனிப்பட்ட திட்டங்கள்', 'பொது திட்டங்கள்' என இரு வகையான திட்டங்கள் தீட்டி - உதவிக் கரங்களைத்

தாராளமாக நீட்டுகிறது.

குடும்ப அளவிலான தனிப்பட்ட திட்டங்கள் மூலம் சலுகை நிறைந்த விவசாயக்கடன் பெறலாம். கிணறுகள் தோண்டலாம். மின் இணைப்புகள் பெறலாம். கறவை மாடுகள் வாங்கலாம். விவசாயக் கருவிகள் பெறலாம். விவசாயப் பயிற்சிகளில் ஈடுபடலாம். சிறு தொழில்களுக்கான வசதிகளை வசப்படுத்திக் கொள்ளலாம். இரும்புப் பட்டறை, சலவைத் தொழிலகம், முடிவெட்டும் கடை என்று எதையும் நிறுவிக் கிராமத்தின் சகல தொழிலாளிகளும் பயன் கொள்ளலாம். தெருத்தெருவாகத் துணி விற்போர், காய்கறி- கனிகள் விற்போர், வளையல் விற்போர் என்று யார் கேட்டாலும் எளிதாக உதவி கிடைக்கும்!

அசேஃபா வழங்கியுள்ள கடன்களின் வரவு, 'சர்வ சேவா சங்க நிதி'யாக மக்களிடமே ஒப்படைக்கப்படுகிறது. இந்த நிதியைக் கொண்டு, ஆங்காங்கே கிராம வங்கிகளை நிறுவி நிர்வகிக்கிற திறமையைச் சாமானியர்களும் பெறுகிறார்கள்!

அசேஃபாவின் 'பொது திட்டங்கள்' போற்றுதலுக்கு உரியவை. பெண்கள், குழந்தைகள் சம்பந்தப்பட்ட வகையில் பேருள்ளத்துடன் உதவ எந்தக் கணமும், அசேஃபா தயார் நிலையில் இருக்கிறது! தாய்மை அடைந்த சமயமும், பிள்ளை பெற்ற பின்பும் தாய் - சேய் நலனில் அசேஃபா காட்டும் அக்கறை அதிகம்! சத்துணவு, சத்து மாத்திரை, தடுப்பூசி, பிற நோய்களுக்கான மருத்துவ வசதி, உடல் நலக் கல்வி என்று இதன் ஆத்மார்த்தமான உதவிகள் கணக்கில் அடங்காதவை!

மேலும் - பாதுகாக்கப்பட்ட தூய குடிநீர், குறைந்த செலவில் கழிப்பறைகள், புகையற்ற நவீன அடுப்புகள், சாண எரிவாயு அமைப்புகள், பிரத்தியேகக் கல்வி தரும் இரவுப் பள்ளிகள் என்று அசேஃபாவின் சேவைப் பட்டியல் நீண்டு கொண்டே போகும்!

பல ஊர்களுக்குப் பள்ளிக் கட்டடங்களை இலவசமாய்க் கட்டிக் கொடுத்திருப்பதுடன், அசேஃபாவே பதின்மூன்று பள்ளிகளைத் திறம்பட நடத்துகிறது!

போக்குவரத்துக்கு வசதியாக இணைப்புச் சாலைகள், நடப்பதற்கு இசைவாக ஓடைப் பாலங்கள், படிப்பகங்கள், பேருந்து நிறுத்த நிழற்குடைகள், சமுதாயக் கூடங்கள் என்று உத்தரமேரூர்

வட்டத்து மூலை முடுக்குகளில் எல்லாம் அசேஃபாவின் முத்தி ரைகள் நீக்கமற நிறைந்துள்ளன!

படிக்காதவர்கள், படித்தவர்கள் என்று அறுதிப் பெரும் பான்மை மக்களுக்கு வேலை வாய்ப்பை வழங்கி, தன்னம்பிக்கை யுடன் கூடிய புதிய சமுதாயம் படைப்பதில் அசேஃபா தன் னையே அர்ப்பணித்துக் கொண்டுள்ளது என்பது சாலப்பொருந் தும்!



# நாளைய நம்பிக்கைகள்



உத்தரமேரூர் வட்டத்தின் பரப்பளவு: 262.85 சதுர கிலோ மீட்டர்.

நஞ்சையும், புஞ்சையும், புறம்போக்குமாக இங்குள்ள விளை நில விரிவு : 41,665 ஹெக்டேர்.

'ஏரி மாவட்டம்' என்று பெயர் பெற்ற செங்கை மாவட்டத்தின் உத்தரமேரூர்ப் பகுதியில் மட்டும் 164 ஏரிகள் உள்ளன! இவற்றில் பெரியவை: 41. சிறியவை: 123.

பெரும்பான்மை மக்கள் இவற்றை நம்பியே வாழ்வு நடத்துகிறார்கள்.

இந்த வட்டத்தின் மக்கள் தொகை: 1,32,679. ஆண்கள்: 67,295 பேர். பெண்கள்: 65,384 பேர். இவர்களிடம் எவ்வளவோ எதிர்பார்ப்புகள் உள்ளன.

''இந்தத் தாலுக்காவில் மழை குறைஞ்சு போச்சு. போதாக்குறைக்கு, வடாற்காடு மாவட்டம் தண்டரையிலே சேயாற்றின் குறுக்கே அணை கட்டிட்டாங்க. அதனால், உத்தரமேரூர் ஏரிக்குத் தண்ணீர் வரத்து இல்லே. இது சம்மந்தமாய் அரசு தீவிரமாய் யோசிச்சு உதவினால்தான் மக்கள் விவசாயத்தில் அக்கறை காட்டுவாங்க!'' என்கிறார் சஜ்ஜன்ராஜ்.

''வெறும் நெல் பயிரை நம்பியே இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம். இந்த நிலை மாற வேண்டும்! இந்தப் பகுதியில்

தொழிற்சாலைகள் பெருக வேண்டும்!'' என எதிர் பார்க்கிறார், வ.சம்பத்து.

''எடமிச்சி வாய்க்கால் திட்டம்' அறிவிக்கப்பட்டு, தேக்க நிலையில் உள்ளது. எழுத்தளவில் இருக்கிற இந்தத் திட்டம் நிறைவேற அரசு தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டும்! இதனால் பதினைந்து கிராமங்கள் பயன் பெறும்!'' என்று கருத்துரைக்கி றார், ஆர்.விஸ்வநாதன்.

''வணிக முன்னேற்றம் பெருகி வருவதால், 'எஸ்.டி.டி.' வசதி உடனே வரவேண்டும்!'' என வலியுறுத்துகிறார், பர்சன்.

''இவ்வளவு பெரிய தாலுக்காவாக இருக்கிறதே தவிர, இங்கே மருத்துவ விடுதி இல்லை! அவசரம் - ஆபத்து என்றால் செங்கல்பட்டுக்குத்தான் போயாக வேண்டும்!'' என்று குறைப்ப டுகிறார், கி.ஜெயராமன்.

''கல்லூரி தேவை...'' என விண்ணப்பிக்கிறார் சுந்தரவரதன்.

''சென்னைக்குப் போக, உத்தரமேரூரிலிருந்து தனி வண்டி கள் இல்லை. வந்தவாசியிலிருந்து வரும் பேருந்துகளையே நம்ப வேண்டியுள்ளது. பல சமயங்களில் இங்கே நிறுத்துவதே கிடை யாது! அப்படியே நிறுத்தினாலும், மூச்சுத் திணறும் கூட்டத்தி னூடே ஒற்றைக் காலில் அல்லது ஓரிரு விரல்களில் நின்றே பயணம் செய்ய வேண்டியிருக்கிறது!'' என்று சங்கடப்படுகிறார் லோ.வரகுணபாண்டியன்.

''பராமரிப்பில்லாமல் கிடக்கும் விக்டோரியா மகாராணி காலத்து ஜுபிளி சத்திரத்தை அரசு பழுது பார்க்க வேண்டும். ஏழைகளிடம் குறைந்த வாடகை வாங்கிக் கொண்டு, திருமணம் முதலிய நல்ல காரியங்களுக்கு விட வசதியாக இருக்கும்!'' என்று கருத்துத் தெரிவிக்கிறார், தாமஸ்.

''சுதந்தரம் வாங்காத போதே இங்கே நீதி மன்றம் இருந்தது! 1947 வரை, தாசில்தாரே நீதிபதியாகவும் இருப்பார்! சுதந்தரம் பெற்ற பின் நீதியும், நிர்வாகமும் ஒன்றாக இருக்கக் கூடாதென்று நீதி மன்றத்தை செங்கல்பட்டுக்கு மாற்றிவிட்டார்கள். எனவே, இந்த ஊருக்கென்று தனி நீதிமன்றம் தேவை!'' என்கிறார் அரங்க நாதன்.

உ.து. சிங்காரத்தின் வேண்டுகோள் வித்தியாசமானது! வேடந்தாங்கலுக்கு வரும் வெளி நாட்டுப் பறவைகள் உத்தரமேரூரைக் கடந்தும் இரை தேடிப் போகும்! 'இங்கே வரும் பறவைகளைச் சுட, தடைவிதிக்க வேண்டும்!' என்பது இவரது கோரிக்கை. குறிப்பாக உத்தரமேரூர், மேநல்லூர், மருத்துவம்பாடி, கடல்மங்கலம், திருப்புலிவனம், மல்லியங்கரணை, வேடபாளையம், நீரடி ஆகிய எட்டு ஊர்களில் பறவை வேட்டை கூடாதென்பதில் முனைப்பாக இருக்கிறார்கள். ''பயிர்களுக்குக் கெடுதி செய்யும் பூச்சி - புழுக்களை அழிக்கிற பறவைகளைப் பாதுகாப்பது நம் கடமை!'' என்று கருதி, வட்டாட்சி அலுவலகத்திற்கும், காவல் நிலையத்திற்கும் ஓயாமல் 'ஆலா' பறவை போல் அலைந்து கொண்டிருக்கிறார், இவர்.

''எங்கள் பகுதியில் எவ்வளவோ சிறப்புகள் உள்ளன! இதை யாரும் சரியானபடி எடுத்துச் சொல்லவில்லை! உலகுக்கு, உத்தரமேரூர் போல் எந்த ஊராவது வழி காட்டியது உண்டா? ஒப்பற்ற கோயில்கள், தமிழர் வரலாறு சொல்லும் - மேன்மை சொல்லும் - கல்வெட்டுகள் என்று, நிறையச் சிறப்புகள் குவிந்திருந்தாலும் உத்தரமேரூர் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சியை இன்னும் எட்டவில்லை என்றே சொல்ல வேண்டும்!... இந்த ஊரை, சுற்றுலா வளர்ச்சித்துறை ஏற்குமானால் பயன் விளையலாம்!...'' என்கிறார் களியாம்பூண்டி இராமதாஸ்.

இவற்றில், எதுவும் நிறைவேறாத கனவில்லை. அவ்வளவும் சரியான சிந்தனைகளே. அனைத்தையும், 'நாளை நடைபெறவிருக்கும் உண்மைகள்' என்றே கருதலாம்; நம்பிக்கை கொள்ளலாம்.

ஏனெனில் - அரசாங்கத்தின் கண்களுடன், அசேஃபாவின் இதயமும் இணைந்து செயல்படுகின்றன; உத்தரமேரூரையும், அதைச் சார்ந்துள்ள ஊர்களையும் பரிவோடு பார்க்கின்றன. எனவே, எண்ணங்கள் யாவும் ஈடேறுவது உறுதி!






# பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்தவர்கள்...

## உத்தரமேரூர்

☐ ***அப்பாபிள்ளை*** - *யாதவர் குலத்தைச் சார்ந்தவர்; பெரிய வீரர். கிருஷ்ணதேவராயரின் தலைமைத் தளபதியாகப் பணியாற்றிச் சிறப்புப் பெற்றவர்.*

☐ ***உத்தண்ட வேலதயுதபாரதி*** - *உத்தரமேரூரைச் சார்ந்த மகிபால குலகால சேரியில் வாழ்ந்தவர். இவருக்கு வீரவல்லித் தேவராசப்பட்டர், காசிநாதர், குப்பையன் என்கிற பெயர்களும் வழங்கின. திருவதிகை வீரட்டானப் பெருமான் மீது கலம்பக நூல் இயற்றி, அதற்குப் பரிசாகத் திருவதிகையில் வீடும் நிலமும் பெற்றதாய்க் கோயில் கல்வெட்டு கூறுகிறது.*

☐ ***ஆர்.ராமானுஜ அய்யங்கார்*** - *செங்கற்பட்டு நீதிமன்றத்தின் மூத்த வழக்கறிஞர்.*

☐ ***யு.ஆர்.பாஷ்யம் அய்யங்கார்*** - *புகழ் வாய்ந்த பொறியியல் வல்லுநர்.*

☐ ***முத்து குருக்கள்*** - *மறை நூல்கள் பலவற்றை முறையாகக் கற்றவர்; உத்தரமேரூர் வரலாறு தெரிந்து, உலகுக்குச் சொன்னவர்.*

## கடல்மங்கலம்

☐ ***பி.என்.சீனிவாச ஆச்சாரியார்*** - *சென்னை பச்சையப்பன் கல்லூரி முதல்வராக இருந்தவர். ஆங்கிலத்தில் தத்துவ நூல்கள் எழுதி அறிவுலகை ஈர்த்தவர்.*

## களியாம்பூண்டி

☐ ***ஒ.சீனிவாச ரெட்டியார்*** - *பத்தாண்டுகாலம் தமிழக சட்டமன்ற உறுப்பினராக இருந்து அரும்பணியாற்றியவர். எளிமைக்கு எடுத்துக்காட்டானவர்!*

## தண்டரை

☐ ***த.செ.குமாரசுவாமி பக்தர்*** - *சென்னை மயிலாப்பூரில் பிரபலமாகத் திகழ்ந்த தண்டரை வைத்தியர். திருமயிலைக் கோயில் திருப்பணிகளுக்கு உதவியவர்.*

□ **டி.சந்திரகாந்தம்** - உத்தரமேரூரில் நெடுங்காலம் மருத்துவத்துறையில் நிலைத்து நின்று தொண்டாற்றியவர்.

□ **மணியம்** - உலக அளவிலான ஒப்பற்ற ஓவியர். தலைமுறைகளைத் தாண்டி வாழும் உன்னதக் கலை மாமன்னர்.

□ **சி. வைத்தியலிங்க பக்தர்** - சோதிட வல்லுநர். சித்த மருத்துவம் தெரிந்தவர், அஷ்டாவதானி

□ **த.கு.வைத்தியலிங்க பக்தர்** - தண்டரை வைத்தியர்களுள் குமாரசுவாமி பக்தர் போலவே மயிலையில் தொண்டு செய்து புகழ்பெற்றவர்.

## புலிவாய்

□ **குமாரதேவ முதலியார்** - பூந்துடைப்பத்தால் கைகளைத் தொட்டு நோய் உணர்பவர். நாட்டு மருத்துவர்.

□ **பொன்னப்ப நாயக்கர்** - விஷக்கடி வைத்தியம் பார்ப்பதில் வல்லவர். நாடி பிடித்து, இன்ன பாம்பு கடித்தது என்று சொல்கிற நுட்பம் தெரிந்தவர்.

## பெருநகர்

□ **வி.அகஸ்தியப்ப முதலியார்** - படிக்காசுப் புலவர்,, கச்சியப்ப முனிவர் ஆகியோரின் நூல்களை நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பதிப்பித்தவர். வள்ளல் பிச்சையப்ப முதலியாரின் மகன்.

□ **காஞ்சி கல்யாணசுந்தரம்** - அறிஞர் அண்ணாவுடன் சமூகத் தொண்டாற்றியவர்.

□ **'சிவஒலி' ஞானானந்த அடிகள்** - ஆன்மீக அருளாளர்; மொழிப்பற்றாளர்.

□ **தில்லை முதலியார்** - ஞானியார் சுவாமிகளால் பாராட்டப் பெற்ற கல்வியாளர்.

□ **வே.மு.பிரம்மீச முதலியார்** - 'பைந்தமிழ்க்களஞ்சியம்' என்னும் பட்டம் பெற்றவர். நாடெங்கும் சென்று சமயச் சொற்பொழிவாற்றியவர். ஆலயத் திருப்பணிகள் செய்தவர்.

□ பெரியவாத்தியார் **சிதம்பர ஆச்சாரியார்** - தொடக்க காலக் கல்விக்குத் தொண்டாற்றியவர்.

□ பெரியவாத்தியார் **சிதம்பர முதலியார்** - தொடக்க காலக் கல்விக்குத் தொண்டாற்றியவர்.

☐ **எம்.டி.வேதாந்தம்** - விடுதலைப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்ற தியாகி; மும்மொழி தெரிந்தவர்.

# பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்ப்பவர்கள்...

## அத்தியூர்

☐ **ஏ.வி. இராதாகிருஷ்ணன்** - உத்தரமேருருக்குப் புகழ் சேர்க்கிற மீனாட்சி தொழில் நுட்பக் கல்லூரி, மீனாட்சி தொழிற் பயிற்சிக் கூடம், மீனாட்சி பல் மருத்துவக் கல்லூரி ஆகியவற்றின் நிறுவனர்.

## அரும்புலியூர்

☐ **ஏ.கே.நடராசன்** - லார்சன் டியூப்ரோ நிறுவனத்தின் பொது மேலாளர்.

☐ **ஏ.கே.இராஜேந்திரன்** - முன் மாதிரி விவசாயி.

## ஆலஞ்சேரி

☐ **இராஜகோபாலன்** - பொறியியல் வல்லுநர்; 'பெல்' நிறுவனத்தில் பணிபுரிகி றார்.

## ஆனைப்பள்ளம்

☐ **வித்துவான் கே.இராசகோபாலன்** - இலக்கியச் சொற்பொழிவாளர்.

## உத்தரமேரூர்

☐ **இரா. அன்பன்** - செங்கல்பட்டு நீதிமன்ற முன்னாள் அரசு வழக்கறிஞர்.

☐ **ஆர்.ஆராவமுதன்** - பொறியியலில் உயர் பட்டம் பெற்றவர்; கலிபோர்னியா வில் பணியாற்றியவர்; இப்போது பெங்களூர் டாடா நிறுவனத்தில் பணிபுரிகிறார்.

☐ **கி.ஆனந்தன்** - நுட்பமான பொற்கலைஞர்; பள்ளிப் பருவத்திலேயே வெள்ளி யால் மிகச் சிறிய 'பம்ப்செட்' செய்து, நீர் இறைக்க வைத்தவர்!கோதுமை அளவில், பல இணைப்புகள் கொண்ட தாலியைச் செய்து சாதனை படைத்தவர். லென்ஸ் மூலம் பார்த்தால்தான் தாலியிலுள்ள கலை நுட்பம் தெரியும். ஒரு கிராம் தங்கத்தில் இப்படியான தாலிகள் 20 செய்யலாம்! தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்தும்

வகையில் தங்கத்தில் மிகச் சிறிய சிற்பம் ஒன்றை உருவாக்கி, 'கின்னஸ்' புத்தகத்தில் இடம் பெற முயலும் ஆர்வமுள்ள இளைஞர்!

□ **யு.டி. இராஜரத்தின முதலியார்** - தேவார இசைமாமணி.

□ **டாக்டர் ஆர்.கண்ணன்** - மேற்கு வெர்ஜீனியா பல்கலைக் கழகத்தின் பேராசிரியர்.

□ **ஆர். கணேஷ் இராஜகோபாலன்** - அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றுபவர்.

□ **கன்னியப்பன்** - பிரபலமான உடுக்குக் கலைஞர்.

□ **குளோரி** - கனடாவில் பெண்கள் முன்னேற்றம் பற்றிய உயர் கல்வி கற்கிறார்.

□ **வி.சந்தியாலட்சுமி** - எம்.ஏ.எம்.ஃபில். - திருமுக்கூடல் கல்வெட்டுகளை ஆராய்ந்து பட்டம் பெற்றவர்.

□ **எஸ். சம்பத்ராஜ் ஜெயின்** - சிறந்த மாணவர்களுக்குப் பரிசுத் தொகைகள் அளித்து ஊக்கப்படுத்துபவர். இலக்கிய ஆர்வலர்.

□ **எஸ்.ஏ.சஜ்ஜன்ராஜ் ஜெயின்** ஊர் வளர்ச்சியில் அக்கரை கொண்ட சமூகப் பற்றாளர்.

□ **உ.து.சிங்காரம்** - சமூக நலத் தொண்டர். மக்கள் குறைகளையும், நாட்டின் இடர்களையும் அவ்வப்போது அரசின் கவனத்திற்குக் கொண்டுபோய் நீதி கேட்டுப் போராடுபவர்.

□ **கே.டி.சீனிவாசன்** - தந்திரக்கலை நிபுணர். இவர் மகன் கே.டி.எஸ். ராமனும் தந்தையைப் போலவே பிரபலமாகி வருபவர்.

□ **என்.சீனிவாசன்** - சென்னைப் பல்கலைக் கழகத்தில் வேதியியல் துறையில் ஆராய்ச்சிப் பட்டம் பெற்றவர்.

□ **ஆர். சுந்தரவரதன்** - சென்னை உயர்நீதி மன்றத்தின் மூத்த வழக்கறிஞர்.

□ **வி.சேதுராகவன்** - எம்.பி.ஏ. பட்டம் பெற்று, நியூ ஜெர்சியில் உயர் பதவி வகிப்பவர்.

□ **கே. சையதுகாதர்** - பொறியியலில் எம்.டெக். பட்டம் பெற்றவர்; ஜெர்மனியில் மேலாய்வு செய்து வருகின்ற இளம் விஞ்ஞானி.

□ **ம.கி. நந்தன்** - தலைவர் - வட்டார தொடக்கப்பள்ளி ஆசிரியர் நலநிதி.

☐ **தொப்புளான்** - புகழ் பெற்ற பம்பைக் கலைஞர்.

☐ **க.நரசிம்ம பல்லவன்** - சட்டமன்ற உறுப்பினராக இருந்து சமூகப் பணி செய்தவர். 'எண்ணப்பறவை' என்கிற மாத இதழை நடத்தியவர்; கலை இலக்கிய ஆர்வலர்.

☐ **யு.ஆர்.பத்மநாபன்** - செயற்பொறியாளர். பெங்களூர் தொலைபேசி நிறுவனத்தில் பணியாற்றுகிறார்.

☐ **வி.பாஸ்கரன்** - நியூயார்க் பல்கலைக் கழகத்துக் கம்ப்யூட்டர் துறையில் உயர் பதவி வகிப்பவர்.

☐ **கே.டி.எஸ்.மணி** - அறிஞர் அண்ணாவுடன் சமூகத் தொண்டாற்றியவர். காஞ்சி 'நகரமன்ற'த் தலைவராக இருந்தவர். நல்ல எழுத்தாளர்.

☐ **பி. முனுசாமி** - 'ஊர் நலக்குழு'த் தலைவர்; தொண்டு மனம் படைத்த தொடக்கப் பள்ளி ஆசிரியர்.

☐ **டாக்டர் ஆர்.எஸ்.ரங்கராஜன்** - ஐ.ஏ.எஸ். பட்டம் பெற்றவர்; புதுதில்லியில், மனிதவள மேம்பாட்டுத் துறையில் துணைச் செயலராகப் பணிபுரிபவர்.

☐ **ஆர்.ராதா** - எம்.ஏ.எம்.ஃபில். - 1880-1980 வரையிலான உத்தரமேரூர் மக்களின் சமூக மாற்றம் பற்றி ஆராய்ந்து பட்டம் பெற்றவர்.

☐ **எஸ். ராமபத்திரன்** - இளமைக் காலம் தொட்டு, கல்வியில் முதலிடம் பெற்றவர்; தங்கப் பதக்கம் வென்றவர். மேற்கு வெர்ஜினியா பல்கலைக் கழகத்தில், 'நுண் உயிரியல்' துறையில் பணியாற்றுபவர்.

☐ **மேஜர் ஆர்.எஸ்.வரதன்** இந்திய இராணுவத்தில், பஞ்சாப் எல்லையில் பணியாற்றுபவர்.

☐ சிரோன்மணி **வாசுதேவாச்சாரியார்** - வடமொழி வல்லுநர்; மதுராந்தகம் சமஸ்கிருதக் கல்லூரி முதல்வர்.

☐ **ஆர். விசுவநாதன்** - சமூகப் பணியாளர்; மிகச்சிறந்த கூத்துக் கலைஞர்; பிரபலமான நாடக மன்றத் தலைவர்

☐ **விஜயன்** - முற்போக்குச் சிந்தனையாளர், மேடைப் பேச்சாளர்.

☐ **ஆ.ஜவஹர்** - முன்னாள் பேரூராட்சித் தலைவர். இலக்கிய ஆர்வலர். கதை, கட்டுரையாளர். உத்தரமேரூர் நகர வளர்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட ஆராவமுது ஐயங்கார், தியாகி ஜானகி அம்மாள் ஆகியோரின் புதல்வர்.

□ **கே.பி. ஜானகிராமன்** - உத்தரமேரூர் பேரூராட்சி மன்றத்தின் முன்னாள் தலைவர்; சமூக வளர்ச்சியில் நாட்டமுடையவர்.

□ **கி.ஜெயராமன்** - தமிழ்நாடு தொடக்க நடுநிலைப்பள்ளி 'பட்டதாரி ஆசிரியர் மடல்' தொகுப்பாளர். இலக்கிய ஆர்வலர். கதை - கட்டுரையாளர்.

□ **ஜானகி அம்மாள்** - 23 ஆம் வயதில் காந்தியடிகள் அறிவித்த தனிநபர் சத்தியாகிரகத்தில் கலந்துகொண்டு சிறை சென்ற தியாகி.

## உரக்காட்டுப்பேட்டை

□ **கு.மு. இளங்கோ** - சமூகப் பணியாளர்; நாடக ஈடுபாடு கொண்டவர். கவிஞர் தணிகைச்செல்வன் நாடகங்களை மேடை ஏற்றியவர்.

□ **கவிஞர் தணிகைச்செல்வன்** - முனைப்பான முற்போக்குச் சிந்தனையாளர்; புகழ் வாய்ந்த முன்னணிக் கவிஞர். கலை இலக்கியவாதிகள் பலரை உருவாக்கியவர்.

□ **துரை. மகாதேவன்** - சமூகத் தொண்டர்; பேச்சாளர்; நாடக ஆர்வலர்.

## கல்லமாநகர்

□ **ஆதிமூலம்** - மாநில அளவிலான கால்பந்தாட்ட வீரர்.

## கம்மாளம்பூண்டி

□ **எம்.எஸ்.மணியம்** - மலேசியாவில் முக்கிய வணிகர்.

□ **கே.ஆர். ஜெயராமன்** - உலக நாடுகள் பலவற்றுக்குச் சென்றுவந்த கல்வியாளர்.

## களியாம்பூண்டி

□ **ஏ.கே.இராமகிருஷ்ண ரெட்டியார்** - சுதந்தரப்போரில் இருமுறை சிறை சென்றவர். வினோபாபாவே தமிழ்நாட்டுக்கு வந்தபோது, தம்முடைய நிலத்தை மட்டுமல்லாமல் தம் மனைவியின் கிராமத்தையே தானமாக வழங்கிய அரிய தியாகி.

□ **எஸ். இராமதாஸ்** - தேசிய உணர்வுடைய சமூகப் பற்றாளர். முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் ஓ.சீனிவாச ரெட்டியாரின் மகன். பசுமைப் புரட்சி செய்வதில் குறிப்பிடத் தகுந்தவர்.

## காட்டுப்பாக்கம்

□ **இரா. கிருஷ்ணன்** - முன்னாள் அரசு வழக்கறிஞர்.

☐ **வரதராஜன்** - பொது நலத் தொண்டர்; மக்கள் பிரச்சினைகளை முன்னிறுத்திச் சிறை சென்றவர்.

☐ **கவிஞர் வ.ஜெயபாஸ்கரன்** - பல ஏடுகளில் எழுதுபவர். பல கவியரங்கங்களைக் கண்டவர். தொலைக்காட்சியில் விளம்பரதாரர் நிகழ்ச்சிக்கான நாடகங்களை எழுதி இயக்கியவர். திரைப்படத் துணை இயக்குநர். 'நமது மகுடம்' மாத இதழின் இணை ஆசிரியர். சூடும் சுவையும் நிறைந்த கட்டுரையாளர்.

## சோமநாதபுரம்

☐ **கே.என்.இராதாகிருஷ்ணன்** தெருக்கூத்துக் கலைஞர்.

## தண்டரை

☐ **டி.சின்னையா** - செங்கல்பட்டில் வாழ்கிற பிரபல 'எண்ணெய் வண்ண' ஓவியர். இவருடைய ஓவிய வாரிசுகள்: என்.கிருஷ்ணமூர்த்தி, என்.சேகர். இவர்கள் இருவரும் தண்டரையைச் சேர்ந்தவர்களே.

☐ **மணியம் செல்வன்** - ஓவிய மாமன்னர் 'மணியம்' பெற்ற இணையற்ற செல்வம். 'உத்தரமேரூர் உலா' என்கிற இந்தப் புத்தகத்திலுள்ள சித்திரங்களைப் படைத்த மேன்மையான கலைஞர்.

☐ **டாக்டர் ப.குமாரசுவாமி** - தண்டரை வைத்தியத்துடன் சித்த, இந்திய மருத்துவ முறைகளையும் கற்றவர். காஞ்சியில் அரசு மருத்துவமனையில் பணியாற்றுகிறார்.

## திருமுக்கூடல்

☐ **புலவர் கோ. கோவிந்தசாமி** - எழுத்தாளர்; நாவலாசிரியர். வானொலி நாடகங்களைப் படைப்பதில் வல்லவர்.

☐ **மு. ரத்தினக்குமார்** - கவிஞர். 'கோடைமழை' என்னும் நூல் இவரை இனம் காட்டும். 'ங்' என்கிற சிற்றேடு, இவரது தனித்துவம் பற்றி மெய்ப்பிக்கும்.

## திருவானைக்கோயில்

☐ **டி.ஆர். ஞானசேகரன்** - உத்தரமேரூரின் முன்னாள் பேரூராட்சித் தலைவர்; சட்டம் பயின்றிருந்தும், வழக்கறிஞர் தொழில் செய்யாமல் மக்கள் பணியில் நாட்டம் செலுத்துபவர்.

☐ **டாக்டர் என்.பி. பக்தா ரெட்டி** - பிரபல தோல் நோய் நிபுணர். எத்தியோபியாவில் பணியாற்றுபவர். (நல்லூர்)

## நெய்யாடுப்பாக்கம்

☐ **பத்மஸ்ரீ நெ.து.சுந்தரவடிவேலு** - கல்விப்புரட்சியில் ஈடுபட்டுப் பல சாதனைகளை நிகழ்த்தியவர். சமூக மேம்பாடு பற்றிச் சதாகாலமும் சிந்திக்கிற மூதறிஞர்.

## படூர்

☐ **பி.ஆர். கமலம்** - கூத்துக் கலையில் வல்லவர்; இவர் தலைமையிலான நாடக மன்றம், மாவட்டம் கடந்தும் புகழ் பெற்றது.

☐ **பி.ஆர். பலராமன்** - இசைஞானம் மிக்கவர்; ஆர்மோனியக் கலைஞர். நடிகை பி.ஆர்.கமலத்தின் சகோதரர்.

☐ **பூபதி** - மிருதங்க வல்லுநர்.

## பினாயூர்

☐ **செல்வராஜ்** - அம்பேத்கார் மன்றத் தலைவர்; சமூகநலப் பணிக்காக, ஆர்வமுள்ள இளைஞர்களை உருவாக்கியவர்.

☐ **மோகன்** - அறிவியல் கண்ணோட்ட விவசாயி; அரிமா சங்கம் மூலம், சமூகத் தொண்டாற்றுபவர்.

## புலிவாய்

☐ **அருணை வடிவேல் முதலியார்** - சைவசித்தாந்த மேதைகளே போற்றும் தத்துவ மேதை. பல தத்துவ நூல்களைத் தமிழுக்குத் தந்தவர். மிகச் சிறந்த பேச்சாளர்.

☐ **அ.பாலறாவாயன்** - சென்னை லயோலா கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர். சைவ சித்தாந்த வித்தகர் சி. அருணை வடிவேல் முதலியாரின் மகன். கவிஞர்; இலக்கியச் சொற்பொழிவாளர்; நூலாசிரியர்.

## பெருநகர்

☐ **அகஸ்தியப்ப முதலியார்** - வள்ளல் பிச்சையப்பர் பரம்பரையைச் சேர்ந்தவர். தமிழிலக்கியங்களைப் பதிப்பித்த அகஸ்தியப்ப முதலியாரின் பேரன். தம்முடைய முன்னோர் போல் தொண்டு மனமும், நிர்வாகத் திறமும் நிறைந்த ஊர்த் தலைவர்.

☐ **முருக. நடராசன்** - பாரதக் கதை விரிவுரையாளர்; ஆன்மீகச் சொற்பொழிவாளர்.

☐ **பாலாஜி குருக்கள்** - கோயில் குடமுழுக்காட்டு நிகழ்ச்சிகளை மரபுப்படி நடத்துவதில் வல்லவர்; மிக இளம் வயதினரான இவர், காசியிலும் கும்பாபிஷேகம் நடத்தி வடபுலத்து வேத விற்பன்னர்களின் போற்றுதலைப் பெற்றவர்.

☐ **கவிஞர் வெற்றியரசு** - பல கவியரங்கங்களில் பாடியவர்.

## மருதம்

☐ **டாக்டர் இ. ஆறுமுகம்** - மருத்துவத் துறையில் புகழ் பெற்றிருப்பவர்.

☐ **கவிஞர் மருதம் இளந்தமிழன்** - கல்லூரிக் காலத்திலேயே கவிதைகள் இயற்றியவர். கவியரங்கங்களில் முத்திரை பதிப்பவர். இதழியல் துறையில் பட்டயம் பெற்றவர். 'எண்ணப்பறவை' இதழில் பணிபுரிந்தவர். 'அக்கினிப்பூக்களி'ன் ஆசிரியர். சமூகத் தொண்டர் யோகி ஜகந்நாதனின் புதல்வர்.

☐ **செங்கை சிவம்** - சென்னை பெரம்பூர்த் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக இருந்தவர். சமூகப் பணியாளர்.

☐ **யோகி ஜகந்நாதன்** - காந்தியத் தொண்டர்; நாட்டிற்காகச் சிறை சென்றவர் தம் பகுதி மக்களின் பொதுப் பிரச்சினைகளை மாநில, மைய அரசுகளுக்குத் தொடர்ந்து தெரிவித்துத் தீர்வுகாண முயல்பவர்.

## மருத்துவம்பாடி

☐ **எம்.வி.சீனிவாசன்** - ஐ.ஆர்.ஏ.எஸ். பட்டம் பெற்றவர். இரயில்வே போர்டு உறுப்பினர். இது, மத்திய அமைச்சருக்கும் மேலான உயர் பதவியாகும். இந்தியாவில் மூன்றே மூன்று உறுப்பினர்களில் இவர் ஒருவர்.

## மானாம்பதி

☐ **வி.இராஜேந்திரன்** - வேதியியல் பேராசிரியர். பணி : சென்னை பச்சையப்பன் கல்லூரியில்.

☐ **நீல. கார்த்திகேயன்** - ஆட்சி மாற்றங்களால் செல்வாக்குக் குன்றாதவர். மக்கள் விரும்பும் ஊர்த் தலைவர். சமூக நன்மைகளுக்காகத் தொடர்ந்து உழைப்பவர்.

☐ **மு.கூத்தரசன்** - மேஜர் ஜெனரல். ஜனாதிபதி மாளிகையின் இராணுவத் தலைமைப் பொறுப்பில் இருப்பவர்.

☐ **டாக்டர் மா. செல்வராசன்** - முதன்முதலில் பாவேந்தர் பாரதிதாசனின் கவிதைகளை ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றவர்.

☐ **மு.துரைசாமி**- சென்னை பச்சையப்பன் கல்லூரியின் கணிதவியல் பேராசிரியர்.

☐ **கோ. நடராசன்** - இயற்பியல் பேராசிரியராகப் பழநியாண்டவர் கல்லூரியில் பணியாற்றுபவர்.

□ **எஸ். பன்னீர் செல்வம்** - கோ-ஆப் டெக்ஸ் நிறுவனத்தில் உயர்பதவி வகிப்பவர்.

□ **ஆர். வேணுகோபால்** - சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.

## மானாம்பதி கண்டிகை

□ **அருளப்பா** - ஆர்ச் பிஷப் அந்தஸ்துக்கு உயர்ந்தவர்; மக்கள் செல்வாக்கு நிறைந்த மதத்தலைவர்

□ **எஸ்.பி. தாமஸ்** - கப்பல் தலைவர்

## விசூர்

□ **விசூர் மாணிக்கம்** - ஆன்மீக, இலக்கியப் பேச்சாளர். கவிஞர். கவியரங்கங்கள் பட்டிமன்றங்கள் வாயிலாகப் பிரபலமாகி இருப்பவர்.

## வேடபாளையம்

□ **டி. நாகரத்தினம்** - சிகாகோ பல்கலைக் கழகத்தின் பேராசிரியர்; பல உயர் பட்டங்கள் பெற்றவர்.

□ **இராஜலட்சுமி வெங்கடேஸ்வரன்** - ஐ.ஆர்.ஏ.எஸ். பட்டம் பெற்றவர்; ஆந்திர மாநில ஹைதராபாத்தில் உயர் பதவி வகிப்பவர்.

## விருது பெற்ற நல்லாசிரியர்கள்

□ **அருணாசலம்** - மானாம்பதி.

□ **எம். இராமநாதன்** - தூளி.

□ **கா. சுந்தரேசன்** - உரக்காட்டுப்பேட்டை.

□ **டி. தனபால்** - வேடபாளையம்.

□ **வி.எம். துரைசாமி அய்யங்கார்** - மல்லியங்கரணை.

□ **சி. பாண்டுரங்கப் பிள்ளை** - உத்தரமேரூர்.

□ **ஜே.ஜி. மரியதாஸ்** - மானாம்பதிகண்டிகை.

□ **கே.விநாயகம்** - உத்தரமேரூர்.

□ **வைலட் தர்மராஜ்** - உத்தரமேரூர்.

## வளர்ந்துவரும் கவிஞர்கள்

- பொன். இலக்கியமணி - காட்டுப்பாக்கம்.
- எம். ஏழுமலை - உரக்காட்டுப்பேட்டை.
- ஏ.ஃபரூக் அலி - உத்தரமேரூர்.
- பொன். சுந்தராசன் - ராவத்தநல்லூர்.
- தி.க. சண்முகம் - திருப்புலிவனம்.
- வெ.சுந்தரவரதன் - உத்தரமேரூர்.
- லட்சுமி சரஸ்வதி - உத்தரமேரூர்.
- லோ.வரகுணபாண்டியன் - உத்தரமேரூர்.
- தி.வெ. ஜெகதீசன் - உத்தரமேரூர்.

## இசைக்கலைஞர்கள்

### திருப்புலிவனம்

- அரிதாஸ் - நாதசுரம்.
- உத்தரகுமாரன் - நாதசுரம்.

### உத்தரமேரூர்

- கமலி ஸ்ரீதர் - புல்லாங்குழல்.
- லட்சுமணன் - கிடார்.
- ஈ.எஸ். மணி - தவில்.

### சாலவாக்கம்

- நா.சீனிவாசன் - கர்நாடக இசை.

## திரைத்துறைக் கலைஞர்கள்:

### உத்தரமேரூர்

- செந்தில்வேல் - திரைப்படத் துணை இயக்குநர்.
- எஸ். ரவி - ஒளிப் பதிவாளர்; வங்காளப் படவுலகில் பிரபலமானவர்.

☐ **ஆர்.கே.செல்வமணி-** திருமுக்கூடலைச் சேர்ந்தவர். இளம் வயதில் நிறை புகழ் பெற்று வருபவர்; கதை, திரைக்கதை, உரையாடல், இயக்கம் என்று ப துறைகளிலும் வெற்றிக் வாகை சூடுபவர்.

## புகழ் வாய்ந்த பகல் வேடக்காரர்கள்

☐ **அருணாசல பண்டாரம்** - அப்பயநல்லூர்.

☐ **இராகவ தேவர்** - கன்னிக்குளம்.

☐ **குப்புசாமித் தேவர்** - திருப்புலிவனம்.

☐ **குப்புசாமித் தேவர்** - புலிவாய்.

☐ **சிங்காரவேல் தேவர்** - அப்பயநல்லூர்.

☐ **சித்தலிங்கத் தேவர்** - சீரடிக்குப்பம்.

☐ **தாமோதர தேவர்** - புலிவாய்.

☐ **மாணிக்கத்தேவர்** - கன்னிக்குளம்.

☐ **முருகேசத்தேவர்** - அப்பயநல்லூர்.

☐ **வெங்கடாசலத்தேவர்** - மருதம்.

## புகழ்பெற்ற தண்டரை வைத்தியர்கள்

☐ **ச.கார்த்திகேயன்** மருத்துவப்பணி: உத்தரமேரூரில்.

☐ **என்.சங்கரன்** - மருத்துவப்பணி: தண்டரையில்.

☐ **த.கு.செங்கல்வராயன்** - மருத்துவப்பணி: கிளியானூரில்.

☐ **டி.நடராசன்** - மருத்துவப்பணி : தண்டரையில்.

☐ **த.கு.பலவையா** - மருத்துவப்பணி : திருவல்லிக்கேணியில்.

☐ **என். வெங்கடாசலம்** - மருத்துவப்பணி : வந்தவாசியில்.

## உத்தரமேரூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்தவர்கள்

☐ **வி.கே.ராமசாமி முதலியார்** - இவர், இன்று இல்லை.

☐ **கே.எம்.இராஜகோபாலன்**

---

☐ பாக்கூர் சுப்பிரமணியம்

☐ டாக்டர் எஸ்.ஜகத்ரட்சகன்

☐ காஞ்சி பன்னீர்செல்வம் - இவர், உத்தரமேரூர் தொகுதியின் இன்றைய சட்டமன்ற உறுப்பினர்.

இவர்கள் அனைவரும் உத்தரமேரூர் வட்டத்தைச் சாராதவர்கள். எனினும், உத்தரமேரூர் சட்டமன்றத் தொகுதியில் நின்று, வெற்றி பெற்று, இந்தப் பகுதியின் வளர்ச்சிக்கு உதவியவர்கள்; உதவுபவர்கள். இவர்களுள், டாக்டர் ஜகத்ரட்சகன், ஒரு முறை பாராளுமன்ற உறுப்பினராகவும் இங்கே பணியாற்றி இருக்கிறார்.

## உத்தரமேரூர் வட்டத்திலுள்ள தொழிற்சாலைகள்...

☐ வீரராகவா நூற்பாலை

☐ விஜயலட்சுமி பிளாஸ்டிக் தொழிற்சாலை - சிறு தொழில் நிறுவனம்

☐ மாதுரியம்மன் வெல்ல ஆலை - சிறுதொழில் நிறுவனம்

## உத்தரமேரூரில் செயல்படும் சமூக - கலை இலக்கிய மன்றங்கள்...

கலை மன்றம்

முத்தமிழ் மன்றம்

தமிழ் இலக்கிய மன்றம்

இளைஞர் நற்பணி மன்றம்

நண்பர்கள் நற்பணி மன்றம்

ஊர் நலக்குழு

பாவேந்தர் பைந்தமிழ் மன்றம்

திருக்குறள் பேரவை

தமிழ்ச் சோலை

இலக்கிய மேடை

உலக சமுதாய சேவா சங்கம் (கிளை)

உத்தரமேரூர் வட்டாரக் கிராமதான பால் வழங்கும் சங்கம்

# உத்தரமேரூர் வட்டத்து ஊர்கள்

1. அக்ரகாரம்
2. அகரம்தூளி
3. அத்தியூர் மேல்தூளி
4. அம்மையப்பநல்லூர்
5. அரசாணிமங்கலம்
6. அருங்குன்றம்
7. அருணாசலப்பிள்ளை சத்திரம்
8. அரும்புலியூர்
9. அழிசூர்
10. அன்னாத்தூர்
11. அனுமந்தண்டலம்
12. ஆண்டித்தாங்கல்
13. ஆதவப்பாக்கம்
14. ஆலஞ்சேரி
15. ஆலப்பாக்கம்
16. புலிவாய்
17. ஆவாரம்பூண்டி
18. ஆனம்பாக்கம்
19. ஆனைப்பள்ளம்
20. இடமிச்சி
21. இடையம்புதூர்
22. இருமரம்
23. இளநகர்
24. உச்சிக்கொல்லைமேடு
25. உத்தரமேரூர்
26. உல்லம்பாக்கம்
27. எலப்பாக்கம்
28. ஒட்டந்தாங்கல்
29. உரக்காட்டுப்பேட்டை
30. ஒழுகரை
31. ஒழையூர்
32. ஒங்கூர்
33. கட்டியாம்பந்தல்
34. கடம்பர்கோயில்
35. கடல்மங்கலம்
36. கணபதிபுரம்
37. கம்மாளம்பூண்டி
38. கரும்பாக்கம்
39. கருவேப்பம்பூண்டி
40. கல்யாணமேடு
41. களர்குட்டை
42. களியப்பேட்டை
43. களியாம்பூண்டி
44. கன்னிக்குளம்
45. காக்கநல்லூர்
46. காட்டாங்குளம்
47. காட்டுக்கொல்லை (மலையாங்குளம்)
48. காட்டுக்கொல்லை (நாஞ்சிபுரம்)
49. காட்டுப்பாக்கம்
50. காட்டுப்புத்தூர்
51. காரணி
52. காரியமங்கலம்
53. காவணிப்பாக்கம்
54. காவனூர் புதுச்சேரி
55. காவாம்பயிர்
56. காவித்தண்டலம்
57. கிளாங்கரை
58. கிளக்காடி
59. கீழ்ப்புத்தூர்
60. குண்ணவாக்கம்
61. குப்பையநல்லூர்
62. குரும்பரை
63. குருமஞ்சேரி
64. குருவாடி
65. கைத்தண்டலம்
66. கொருக்கந்தாங்கல்
67. சடச்சிவாக்கம்
68. சாத்தனஞ்சேரி
69. சாலவாக்கம்
70. சித்தமல்லி
71. சித்தனக்காவூர்
72. சித்தாலப்பாக்கம்
73. சிலாம்பாக்கம்
74. சிறுகளத்தூர்
75. சிறுதாமூர்
76. சிறுமயிலூர்
77. சிறுபினாயூர்
78. சின்னாலம்பாடி
79. சீட்டணஞ்சேரி
80. சீதாபுரம்
81. செம்புலம்
82. சேத்துப்பட்டு
83. சேர்ப்பாக்கம்
84. சோமநாதபுரம்
85. தட்டாம்பூண்டி
86. தண்டரை - 232 (மானாம்பதி)

87. தண்டரை - 283
(சித்தனக்காலூர்)
88. தண்டரை - 290
(சிறுபினாயூர்)
89. தளவாரம்பூண்டி
90. திருப்புலிவனம்
91. திருமுக்கூடல்
92. திருவானைக்கோயில்
93. தினையாம்பூண்டி
94. தேரடிக்கொல்லை
95. தோட்டனாவல்
96. நடுப்பட்டு
97. நத்தக்கொல்லை
98. நரியம்பாக்கம்
99. நரியம்புதூர்
100. நல்லூர்
101. நாஞ்சிபுரம்
102. நீர்க்குன்றம்
103. நீரடி
104. நெமிலிச்சேரி
105. நெய்யாடுபாக்கம்
106. நெல்வேலி
107. நெற்குன்றம்
108. நோணாம்பூண்டி
109. படூர்
110. பழவேரி
111. பாண்டவாக்கம்
112. பாலடை
113. பாலேஸ்வரம்
114. பில்லாஞ்சிமேடு
115. பினாயூர்
116. பிங்கநந்தல்
117. புத்தளி
118. புருஷோத்தம்பூண்டி
119. புல்லம்பாக்கம்
120. புலிப்பாக்கம்
121. புலியூர்
122. புலிவாய்
123. பூந்தண்டலம்
124. பெருங்கோழி
125. பெருநகர்
126. பென்னலூர்
127. பேரனக்காலூர்
128. பொற்பந்தல்
129. போத்தம் பொறவடை
130. மடம்
131. மண்டபம்
132. மணல்மேடு
133. மதூர்
134. மருத்துவம்பாடி
135. மருதம்
136. மல்லியங்கரணை
137. மலையாங்குளம்
138. மாம்பாக்கம் - 276
(அரும்புலியூர்)
139. மாம்பாக்கம் - 289
(சிறுபினாயூர்)
140. மாம்புதூர்
141. மானாம்பதி
142. மானாம்பதிகண்டிகை
143. முறுக்கேரி
144. முளகினிமேனி
145. மேட்டுப்பாளையம்
(கம்மாளம்பூண்டி)
146. மேட்டுப்பாளையம்
(காரணி)
147. மேல்தூளி
148. மேல்பாக்கம்
149. மேல்புத்தூர்
150. மேநல்லூர்
151. ராவத்தநல்லூர்
152. ரெட்டமங்கலம்
153. வயலூர்
154. வயலக்காவூர்
155. வளத்தோடு
156. வாடாதவூர்
157. வாடாநல்லூர்
158. விச்சூர்
159. விசூர்
160. விண்ணமங்கலம்
161. வெங்கச்சேரி
162. வெங்காரம்
163. வெண்டிவாக்கம்
164. வேடபாளையம்

□ இவை தவிர, இவ்வூர்களுடன் இணைந்த குக்கிராமங்கள் நூற்றுக்கும் மேற்பட்டவை!